


சிலம்பு ௨௬ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௩, தை
பிப்ரவரி, 1952 | பரல் ௬

# ஓவியப்புலவர்

## திரு. அ. செகந்நாதாச்சாரியார் அவர்கள்.

தமிழக ஓவியப்புலவருள் தாளாண்மைத்திறத்தால் தலை சிறந்து விளங்கித் தம் ஒப்பாரின்றி வாழ்ந்து மறைந்த பெரியார் செகந்நாதாச்சாரியாரவர்கள். இப்பெரியார் பெருமக்கள், மன்னர், வணிகர், புலவர், செல்வர் முதலிய பலராலும் நன்மதிப்பும், பட்டமும், பொன்னும் பிறவும்பெற்றுத் திகழ்ந்தவர்.

**குடும்பம்**

இவர்தம் தந்தையார் செங்கல்வராய ஆச்சாரியராவர். இவர்தம் தொழில் தச்சுவேலையாகும். தாயார் காளியம்மாள் ஆவர். இவர்கள் சென்னை சூளை கோவிந்தப்ப நாயக்கன் தெரு ஐந்தாம் எண் இல்லத்து வாழ்ந்துவந்தனர்.

**பிறப்பு**

தந்தை தாயர் அருந்தவப்பேற்றால் நம் புலவர் தாதுஆண்டு கார்த்திகைத் திங்கள், எட்டாம்நாள் செவ்வாய்க்கிழமை உத்திராடத்து (21-11-1876)ப் பிறந்தனர். இவர் இரண்டாவது மகனாராவார். இவருடன்பிறந்தார் ஆண்பாலர் அறுவர், பெண்பாலர் இருவர். இவர்தம் பிற்காலத் தோற்றத்தின் அடிப்படை முற்காலத் தோற்றத்தை நினைவூட்டுவதாகும். அயர்வின்றி ஓயா உழைப்புழைக்கும் ஒண்மைத்தோற்றம் எண்மையாக வாய்ந்திருந்திருக்கும் என்பதில் எட்டுணையும் ஐயம் இன்று.

**கல்வி**

திண்ணைப்பள்ளி நண்ணி நன்குகற்று ஆங்கிலப்பள்ளியில் உயர்வகுப்பு ஐந்து முடியக் கற்றுத்தேறினர். கற்பிப்பார், உடன் மாணவர், ஒருசாலை மாணவர் முதலியவர்கள் வியப்புற இளமைப்பருவத்தே எளிதாகவும் இனிதாகவும் கற்றனர். கலை நுணுக்கப்பள்ளியில் சேர்ந்து சிற்பம் ஓவியம் முதலியவற்றைப் பயின்றனர். ஒவ்வொன்றிலும் பழந்தொடர்புக் கிழமையால் மிக விரைவில் கற்றுத்தேறினர். பட்டங்கள் பலவும் பண்புறப் பெற்றனர். அகவை பன்னிரண்டனுள் தலைசிறந்த ஓவியப் புலவர் நிலையை எய்தினர்.

இது,

"ஒருமைக்கண் தாம்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து" —திருக்குறள், ௩௯அ.

என்னும் செந்தமிழ்ப் பொதுமறையின் சீரிய கருத்தை வலியுறுத்துவதாகும். கலைநுணுக்கப்பள்ளிக் கண்காணிப்பாளர் வேலாயுத ஆச்சாரியின் மாணவர். ஆசிரியரும் இவர்பால் மிக்க அன்புள்ளவர்.

**தொழில்**

ஓவியம், பொன்வேலை, தச்சுவேலை முதலிய பயின்றுள்ளமையால் அவ்வவற்றின்கண் செவ்விய வல்லுநராகத் திகழ்ந்தனர். அரசினரால் ஒப்புக்கொள்ளப்பட்டுச் சென்னை மலைப் பெருவழியின்கண் உள்ள செருமானியர் பணிக்களரியாகிய வீல்கிளைன் (Wile Klline) என்னும் அலுவலகத்துப் பணியாளர் ஆயினர். திறம்படப் பணியாற்றினர். பணியாற்றும் பண்பில் தணியாக்காதலும், சூழ்ச்சியும், முடிவும், துணிவும், துணிந்தபின் தாழ்ச்சியின்றிச்செய்யும் சால்பும் நிறைந்திருந்தமையால் மிகுவிரைவில் ஓவியப்பகுதிக்குத் தகுதியாம் மேலாளராக ஏற்படுத்தப்பட்டனர். அப்பணியை வாய்மையும் தூய்மையும் வாய்ப்ப நேர்மையுடன் புரிந்தனர். அதனால், அப்பணிக்களரியினர் இவர்பால் நன்மதிப்புக்கொண்டனர். 'ஒல்லுவாய் எல்லாம் வினைநன்றாய்ச் செல்லும்வாய் நோக்கிச் செய்தனர்'.

**தென் இந்தியச் சுற்றுச்செலவு**

பணிக்களரிப் பொது மேலாளருடன் ஓவியச் சிற்பங்களின் சிறப்புமேவி உலகிலேயே தலைசிறந்துவிளங்கும் தென்தமிழ் நாட்டுத் திருக்கோவில்கள் சூழ்ந்துள்ள திருவூர்கள் பலவற்றுக்கும் செல்வாராயினர். ஆங்காங்குள்ள திருக்கோவில்களில்

காணப்பெறும் சிறந்த சிற்ப ஓவியங்களைக் கண்டுகளித்துக் களிப்பித்தற்பொருட்டு நிழலோவியமாகவும், எழுத்தோவியமாகவும் விழுப்பமுறக் கொண்டனர்.

பண்டைக்காலத்தில் தமிழக ஆடவர் அறிவுநூற் கல்விச் செறிவொடு தொழிற்கலை நுணுக்கத்தும் ஏற்றபெற்றி எழில் பெற்றிருந்தனர் என்பது ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னுள்ளதாக ஐயமின்றித் துணியப்பெறும் செந்தமிழ் முழுமுதல் நூலாம் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்துக்கண்,

"..............................................
மடன்மா கூறும் இடனுமார் உண்டே"
—தொல். பொருள். களவியல்—சூ. கக.

என்ற நூற்பாவால் ஓர் அறிவாண்மைமிக்க தலைமகன் தன்னால் காதலிக்கப்பெற்ற தலைமகளின் எழிலுருவை உள்ளக்கிழியின் உருவெழுதி உற்றுநோக்கி மறவா உறவால் உவந்துகப்பன். ஓரோவழிமடலேறுவதாகக் கூறநேருமேல் அகத்தெழுதிய அத்திருவுருவைப் புறக்கிழியினும் சிறப்புற வழுவின்றி எழுதி உலகுக்குணர்த்தி உறவு நிலைநாட்டும் ஒழுக்கத்தை மேற்கோடல் வேண்டும் என்னும் உண்மை புலனாகின்றது. ஓவியம் எழுத உணராதார் என்செய்வர்? உணர்ந்தே உள்ளனர் என்பது உறுதி. பிற்காலத்தும்,

"எண்ணல் எழுதல் இலைகிள்ளல் பூத்தொடுத்தல்
பண்ணமைமை யாழினோ டைந்தும்,"

பயின்றவரே ஆடவரென நன்கு மதிக்கப்பெற்றனர். இதன்கண் எழுதல் என்பது இரட்டுற மொழிதலால் நூலகத்து வரிவடிவிலெழுதுதலும், கிழி(துணி)யகத்து உருவடிவில் எழுதுதலும் கொள்க.

**உரிமைப் பணி**

அடிமைப் பணியினின்றும் விடுதலைபெற்றுத் தம் முயற்சியால் உரிமைப்பணிபூண்டு ஒழுகுவாராயினர். வலியவந்த அரசினர் வேலையையும் நலிவெனக்கருதி ஒதுக்கினர். தம் ஓவியத் தொழிலையே விடாது உஞற்றி உயர்ந்தனர். பாரதி அச்சகத்து முதன்முதல் தொங்கு நாட்குறிப்பு (Calender) ஓவியச் சிறப்புடன் வெளிவரச் செய்தனர். பற்பல பதிப்பகத்தாருக்கும் விளம்பர ஓவியங்களும் வேறுபல ஓவியங்களும் கண்டார் வியந்து கொண்டாடுமுறையில் அவ்வப்போது ஆக்கியளித்தனர். தம்மைத் தவமிருந்து பெற்ற இருமுதுகுரவரின் திருவுருவைத்

தம் கையாலேயே எழுதி அவர்தாமும் கண்டு அகமகிழ யாவரும் இன்புற இனிதமைத்தனர்.

**திருமணம்**

அகவை இருபத்தைந்தில் திருமணம் நிகழ்ந்தது. வாழ்க்கைத்துணைவியராய் வாய்த்த அம்மையார் பெயர் ஈாமாட்சியார். மணம் நிகழ்ந்த இடம் சூளை அவதானப் பாப்பையர் தெரு அண்ணாமலை முதலியார் வீட்டில். இருவரும் கருத்தொருமித்து இல்லறத்தை நல்லறமாகப் பேணினர். விருந்தோம்பி வேளாண்மை செய்தற்கு இடம் வேண்டும்; அதுவே வீடாகும். விருந்து பேணுவீடு பொருந்தற்கரிய புலம்புதரு காடு. விருந்தினராவார் இயல்பாகவே, 'திருந்திய நல்லோர் திருத்துறப் போந்தார்—விருந்தெனக் கொள்க விழைந்து,' என்பதற்கேற்ப ஈரநெஞ்சுடையவர் ஆவர். விருந்தோம்புவதே இல்வாழ்க்கையின் வாரமாகும்.

**மக்கட்பேறு**

அம்மை அப்பர் திருவருளால் செம்மை நலஞ்செய் மக்கள் ஆண்பாலார் நால்வர் பெண்பாலார் நால்வர் தோன்றினர். இளமை இன்பம், வளமுறு கல்வி, கட்டிளமைக் காதல், ஒட்டிய வாழ்க்கை, மட்டில் செல்வம், மக்கட்பேறு முதலிய எல்லா நலமும்பெற்று நன்குவாழ இறுதிவரைப் பெருந்துணை புரிந்து பேணினர்.

**குடும்பம்**

தம்முடைய இறுதிவரையும் தம் உடன்பிறந்தாருடன் வேறுபாடின்றி ஒரு பெருங் குடும்பமாய் வாழ்ந்துவர வேண்டுவ எல்லாம் செய்த மேலோராவர். "வையத்துள் வாழ்வாங்கு" வாழும் வாழ்க்கை இதுவேயாகும். உடன்பிறந்தாருள் எஞ்சியிருப்பவர் இராமாச்சாரி, இலட்சுமண ஆச்சாரி, உலகநாத ஆச்சாரி ஆகிய மூவராவர்.

**வடநாட்டுச் சுற்றுச் செலவு**

கல்கத்தாவில் ஊமைத் திரைக்காட்சிகள் எடுக்கச் சென்றுள்ளனர். மதன் தியேட்டர்ஸ் என்னும் படக் குழும்பில் ஆர்ட்டைரக்டராகவும் படப்பிடிப்பாளராகவும் 1924, 25, 26—ஆம் ஆண்டுகளில் செம்மையுறச் சேவை செய்துள்ளார். வட இந்தியாவில் சிறந்த பல்வேறு இடங்களைப் பார்த்துப் பயின்றவர். காட்சிகளைக் கண்டு களித்தவர். பல ஓவியங்கள் வரைந்து

நாவாரப் புகழப்பெற்ற நயனுடை நல்லோர். படப்பிடிப்புக் கருவிகள் தாமாகவே ஆக்கிய பண்பினர்.

தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், இந்தி முதலிய பன்மொழிகள் பேசவும் எழுதவும் நன்கு தெரிந்தவர். இவர்தம் தாய்மொழி தமிழே. வெளிநாட்டு ஓவியங்களைத் தமிழ்நாட்டு ஓவியங்களுடன் ஒப்பிட்டுப் படம் வரைபவர். வடநாட்டுச் சிறந்த ஓவியர் துரந்தர் என்பாரின் ஓவியச்சார்பாக ஓவியம் வரைபவர். இரவிவர்மாவின் ஓவிய அழகும் இவரை ஈர்த்துள்ளது. ஓவிய நுணுக்கங்களை உள்ளபடி உணர்ந்து உஞற்றியவர்.

**நாடக அணி**

நாடகங்கள் நயமுறுமாறு பல திரைப்படங்கள் எழுதி அளித்தவர். நாடகக் கலையை நன்குணர்ந்தவர். தாமும் நடித்து நற்புகழ் பெற்றவர். அல்லும் பகலும் ஓயா உழைப்பினர். திரைச்சீலைகளை இரவும் எழிலுற எழுதும் ஏற்றத்தர்.

**மன்னர் வழங்கிய வளம்**

ஒருகால் பரோடா மன்னர் முடிபுனைந்து அரசுகட்டிலேறும் அவ்வமயம் அவர்தம் திருவுருவை அவர் குப்பாயத்தமைந்த பொன்னுலியன்ற நன்னயப் பொத்தான்களில் இழைத்து மன்னரும் மருள மக்கள் வியக்க நல்கினர். மன்னரும் அகமகிழ்துளும்ப அரும்பெரும் பரிசும் நற்சான்று நல்கி நயந்து வியந்து பாராட்டினர்.

**கழகத் தொடர்பு**

நம் கழகத்தொடக்கமுதல் கழகத்து வேண்டும் ஓவியங்கள் முற்றும் தாமே ஆக்கிப் போந்தனர். இப் பெருந்தகையார் சிவனெறியினிடத்தும் செந்தமிழினிடத்தும் மட்டற்ற வாய்மைப் பற்றுடையவர். அவ்வுண்மை அவர் ஆக்கி அமைத்துள்ள நால்வரொடு திருமுறை வரலாற்றுக்கண் காணும் பிற ஓவியங்களானும், திருவிளையாடற்கண் காணும் ஓவியங்களானும் விளங்கும். ஏனை உலகியற் கருத்துக்களமைந்த ஓவியங்கள் பாடப் புத்தகங்களிலும் பிறவற்றின் கண்ணும் வந்துள்ளமை உள்ளத் தியற்கையை உரையினும் மிக்குரைப்பதுபோல் காணப்பெறும். இவை உலகிய லொழுக்க நுணுக்கங்களை எவ்வளவு ஆழ்ந் துணர்ந்து வாழ்க்கையொடுபடுத்து வாழ்ந்துவந்தனர் என்பதைப் புலப்படுத்தும் சான்றுகளாகும்.

**நற்பண்பு**

எப்பொழுதும் அகம் புறந்தூய்மை அகலாதவர். தூய வெள்ளாடை குப்பாயம் மேலாடை புனையும் நேயத்தர். புன் முறுவல் பூத்த முகத்தினர். பணிவும் இன்சொலும் அணி யெனக் கொண்டவர். நிலையிற்றிரியாதடங்கிய தோற்றத்தால் மலையினும் சிறந்த மாண்பினர். தம் மகள் வயிற்றுப் பெயரன் திருநாவுக்கரசு என்னும் செம்மலைத் தம்முடன் வைத்துத் தம் தொழிற்கண் பழக்கி நிலைநிறுத்திய தகையினர். குறிகளும் அடையாளமும் கோவிலும் நெறிஎனக் கொண்டொழுகும் குன்று ஒழுக்கத்தர். ஆன்றவிடந்தங்கிய கொள்கைச் சான் ஸ்ரோர் குழுவினையே விரும்பும் மேன்மையர். இன்னும் பன்னரும் நன்னயப் பண்பு பல வாய்ந்த பாங்கினர். ஆலமர் செல்வனும் தென்முகக் கடவுளிடத்து மேலாம் பற்றுடையவர். ஊண் உழைப்பு முதலியவற்றுள் ஒழுங்கு தவறாதவர். நெறிக்கடன் முடித்தன்றி நீரும் அருந்தா நீர்மையர். உடற்பயிற்சி ஓம்பும் கடன்மிக்குள்ளவர். நோயில் வாழ்க்கை எய்திய நுவலுந் திற லினர். ஊக்கமே ஆக்கமாகக்கொண்ட திருவினர்.

**பேரா இயற்கை**

ஊழிக்காலத்தும் ஒற்றிநின்றுயர்ந்த ஒற்றியூரின்கண் ஆறு ஆண்டுகளின் முன் வந்து குடிபுகுந்தனர். இம்மை, உம்மை, மறுமை, அம்மை என்னும் செல்வச் சிறப்புகட்கு உறுதுணை யாகக் கொண்ட வாழ்க்கைத் துணைவியார் ஆறு திங்கள்களுக்கு முன்னர்—கர ஆடியில் பொன்னுல கெய்தினர். நம் ஓவியப் புலவரும் தம் எழுபத்தாறும் அகவை கர. தை கச (21-1-1952) செவ்வாய் இரவு ஒரு மணிக்கு இறைவன் திருவடி எய்தினர். இவர் தம் ஆவி இறைவனடியின்பெய்தி வாழுமாறு இறைவனை இறைஞ்சுகின்றோம்.

இவர் தம் குடும்பத்தாருள் எஞ்சியிருக்கும் பெண்மக்கள் இருவர்கட்கும், உடன்பிறப்பார், பெயரன் முதலாயினர்க்கும் எம்முடைய ஆறுதலைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

ஓவியம் சிற்பம் முதலாம் உயர்கலைகள்
தாவில் முயற்சியினால் தாங்கினன்மன்—மேவுதமிழ்
நாடுவட நாடும் நயந்தசேக நாதன்மன்
கூடுமிறை தாளோன்மன் கூறு.

—இதழாசிரியர்.

———

# தேனீப்பத்து

[தேனீ வெரூஉத்தலையார்]

**வெண்பா**

1. தேனீ ! நினைக்கண்டு 'தேனீ' என் றேனோநான்
ஏனோவென் மீதி விகல்கொண்டென்—னூனில்
உயிரை வெருட்டி ஒழித்திடுதல் போலச்
செயிர்கொண்டு கொட்டினாய் செப்பு.

2. ஈயெனப்பேர் பெற்றாய் அதற்கியைய வொன்றீயாய்
தீயெனவே காயுஞ் சினமுடையை—ஏயும்
அளியெனும்பேர் பெற்றாய் அருள்சிறிது மின்றிக்
களிமிகுந்து கொட்டினாய் காண்.

3. வாயீட்டுந் தேனெடுக்க வந்தேன் எனக்கருதித்
தீயேனை நீயொறுத்த செய்கையிதை—ஆயிற்
கொடுமைசெயாக் கோவலனைக் கொல்வித்த ஆயா
நெடுஞ்செழியன் போன்றனை நீ.

4. கொட்டத்தே னீநீ குவலயத் தேயிருக்கக்
கொட்டப்பிள் ளைப்பாண் டியனிலையென்—றிட்ட
உரையதனைக் கொண்ட உயர்புலவர் நின்றன்
பெருமையறி யாரெனவே பேசு.

5. மாணிக்க வாசகரும் மாணிறைய னார்முதலோர்
பேணி நினது பெருமைதனைக்—காணப்
புகழ்ந்து பலவாப் புகழ்தல்கொட் டிற்குத்
தகுமுறையால் தப்புதற்கே தான்.

6. மாணாக்கர் தந்தலையில் வன்புறவே கொட்டிடான்
மாணா சிரியனா வாய்த்துள்ளான்—காணாய்
எனக்கருதிக் கொட்டிட்ட என்னா சிரியர்
நினைப்போன்றா ருள்ளார் நிகழ்த்து.

7. ஒரூசி போடற் கொருப்படா என்றலைமேற்
கூரூசி நூறு கொழுத்தியுள—சீரார்
மருத்துவன் நின்றனைப்போல் மாநிலத்தில் மற்றும்
ஒருத்தரிலர் என்ப துணர்.

8. குல்லா வணிந்துகொண்டாற் கொட்டல் தலையின்மேற்
செல்லா தெனவறிந்தோ செம்மையதாக்—குல்லாப்போ
டெண்ணுன் எனவறிந்தோ என்றன் தலைதன்னைப்
புண்ணுகச் செய்தாய் புகல்.

9. ஆயுந் தொறுமினிதாய், அந்தண் நிலவுலகில்
ஏயும் இனிமைத்தாய், இன்புடைத்தாய்க்—காயம்
நிலைநிறுத்தும் செந்தமிழ்த்தேன் நேடியுமே என்பால்
இலையென்று கொட்டினு யே.

10. சந்தின்றி மண்டைத் தலமுழுதுங் கொட்டிடவே
சந்துகொண்டு அவ்விடத்தைத் தான்பூச—வந்த
நடராசன் காப்பிட்ட நற்கோலம் போன்மே
படருமா றப்பியுள பத்து.

11. தீந்தமி ழாசான் சிவாக்கிர சுந்தரன்யான்
பூந்தடமார் பாளையம் போம்பொழுது—ஊர்ந்து,
கரவானி பத்தொன்றிற் கள்ளீக்கள் கொட்டப்
பரிவுடனே பாடினனிப் பத்து.

———

ஆயாமல் தேனீக்கள் அண்டினரைக் கொட்டல்
அறிவிக்கும் நெடுஞ்செழியன் வண்முறைசெய் யாமை
ஈயாயும் அளியாயும் இறையனுர் செந்தேன்
எழிலாகும் மணிமொழியார் ஈங்குரைத்தல் சாலா
ஓயாமல் குட்டுமொரு சில்லாசான் ஒப்பாய்
உட்புகுத்தும் ஊசியுடை மருத்துவரும் ஒப்பாய்
நோயாகும் குல்லாவை நோன்றிடநீ குட்டல்
தூண்தமிழை யானுணரா நொய்ம்மையென நொந்தேன்.

———

—இனியன்.

# அன்பும் அருளும்

[T. S. நடராசக் குருக்கள், B. A., L. T.,
ஆசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, சிதம்பரம்.]

அன்பாவது தன்னாற் புரக்கப்படுவார் மேலுளதாகிய காதல் என்பார் புறநானூற்றின் உரையாசிரியராகிய பெரியார். அவ்வன்பு, அன்புடையார் அன்புபாராட்டப்படுவார் ஆகிய இரு வகையாரையும் நோக்கப் பலதிறப்பட்டதாகும். எடுத்துக்காட்டாக, இல்லறத்திலீடுபட்ட கணவன் மனைவியரிடம் காணப்படும் அன்பு, அன்னோர் தம் மக்களிடத்தும் அம்மக்கள் தம் பெற்றோரிடத்தும் காட்டும் அன்பு, ஒரு நாட்டையாள்வோன் தன்நாட்டு மக்களிடத்துக் கொண்டுள்ள அன்பு, அவர்கள் அவ்வாள்வோனிடம் காட்டும் அன்பு எனப் பலவகைப்பட்டதாகும். நாட்டுப் பற்றும் ஒரு மேம்பட்ட அன்புநிலையாகும்.

தனிப்பட்ட வாழ்க்கையிலே தலைசிறந்த அன்பு என்று கூறத்தகுவது இல்லறத்தில் ஈடுபட்ட கணவன், மனைவி இவர்கள் உள்ளத்தே நிரம்பியுள்ள காதலென்னும் அன்பேயாகும். குற்றமற்ற காதல், இவர்களை எல்லாவகையிலும் ஒன்றுவித்து, இல்லறத்தில் ஈடுபட்டோர் ஆற்றவேண்டிய எல்லாக் கடமைகளையும் நிறைவேற்றிப் புகழடையப் பெரிதும் உதவும். இதுபற்றியே, வள்ளுவப் பெருந்தகையாரும்

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது."

என்று அருளினார். எனவே, அன்புடைமை இல்லறத்தாரின் சிறந்தபண்பாகின்றது. மற்றைய உயிர்களிடத்தும் ஆண்பெண் உறவும் அன்பும் காணப்படுகின்றனவெனினும், கூடிவாழும் ஒரு சில பிராணிகளிடத்தே தவிர, மற்றவைகளிடையே அவ்வன்பு இடையே தோன்றுவதாயும், வேட்கை தீர்ந்ததும் பெரும்பான்மையும் முடிந்துவிடுவதாயும் உள்ளது.

இத்தகைய ஒன்றுபட்ட காதலின் விளைவாக மக்கட்பேறு உண்டாகின்றது. ஒருவன் அல்லது ஒருத்தி பெறும் பேறுகளில் தலைசிறந்தது, மக்கட்பேறு என்று கூறுகிறார் திருவள்ளுவனார்.

*"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே"

என்னும் பாண்டியன் அறிவுடைநம்பியின் பாடலும் இங்கு நோக்கத்தக்கது. இல்லறவாழ்வில் ஈடுபட்ட கணவனும் மனைவியும் தம் மக்களிடத்தே ஆராத காதலுடையாராகின்றனர். இக்காதல் இயற்கையன்பாகும். இறைவன் உயிர்களிடத்தேகொண்ட அன்பினால் மக்களினமும் மற்றையினமும் பெருகுதற்கென விதித்ததாகும் இவ்வியற்கையன்பு. குழந்தை வளரவளரப் பெற்றோரின் அன்பும் வளர்கின்றது; தம்அறிவை மயக்குகின்ற அக்குழந்தையின்பத்திலே அன்னோர் திளைக்கின்றனர். ஐந்துவயது நிரம்பிய தம் குழந்தையைப் பள்ளிக்குவைத்துப் படிப்பிக்கும் கவலையுண்டாகின்றது. நம்நாட்டிலே படிப்பிக்க இயலாதார் தம் மக்களை ஏதேனும் தொழிலில் பயிற்றுவிக்கவாயினும் முந்துகின்றனர். எனவே, பெற்றோர் யாவரும் தம் மக்களது அறிவு வளரவேண்டும், பிற்கால வாழ்வில் அவர் மேம்பாடடையவேண்டும், தம்மைவிடச் சிறந்தவாழ்வை அன்னோர் பெறவேண்டுமென்றெல்லாம் கருதி ஆவனவற்றைச் செய்கின்றனர்; பின்னர், அவர்க்குத் திருமணமுடிக்கின்றனர்; பின்னர் தம் மக்கள் பெருவாழ்வு பெற்றால் தாமும் பெருமகிழ்வுறுகின்றனர்; தாழ்வு நேர்ந்துழிப் பெரிதும் வருந்துகின்றனர். எனவே, ஒருவற்கு மக்கட்பேறு உண்டானதுமுதல் தாம் இவ்வுலகைவிட்டு நீங்கும் வரை அம்மக்களிடத்தே அன்பினாற் கவலைகொள்ளுதல் தெள்ளிது. ஒருவனது இறுதிமூச்சு தன் மக்களை வாழ்த்துவதில் செலவழிக்கப்படுகிறது எனில் அது மிகையாகாது.

இனி, மற்றைய உயிர்களிடத்தே காணப்படும் இப் பெற்றோர் காதலை ஒருசிறிது நோக்குவாம். விலங்குகளும் தம் குழந்தைகளிடத்தே மிக்க அன்பு பாராட்டுகின்றன. தன் கன்றினிடத்தே

---

* **இதன்பொருள்:** படைக்கப்படும் செல்வம் பலவற்றையும் படைத்துப் பலருடனே கூடவுண்ணும் உடைமைமிக்க செல்வத்தையுடையோராயினும் காலம் இடையே உண்டாகக் குறுகக்குறுக நடந்துசென்று சிறிய கையை நீட்டிக் கலத்தின்கட் கிடந்ததனைத் தரையிலேயிட்டும் கூடப் பிசைந்து தோண்டியும் வாயாற் கவ்வியும் கையால் துழாவியும் நெய்யையுடைய சோற்றை உடம்பின்கட்படச் சிதறியும் இங்ஙனம் அறிவை இன்பத்தான் மயக்கும் புதல்வரையில்லாதார்க்குப் பயனாகிய முடிக்கப்படும் பொருளில்லை, தாம் உயிர்வாழுநாளின்கண்.

பசு காட்டும் அன்பை நோக்குங்கள்; அதற்குப் பாலூட்டி அன்புடனே பாதுகாத்து, மற்றைய பிராணிகளை அதனிடம் நெருங்கவொட்டாது தடுத்து நிற்கின்றது அப்பசு. பறவைகட்குப் பெற்றோர்கவலை முட்டையிடுமுன்பே தோன்றிவிடுகின்றது. முட்டையிடும் பருவம் வந்தவுடனே அவை கூடுகட்டத் தொடங்குகின்றன; பின்னர் முட்டையிட்டு அவற்றை அடைகாத்துக் குஞ்சு பொரிக்கின்றன; குஞ்சுகட்கு இரைதேடிக் கொணர்ந்து ஊட்டுகின்றன; பின்பு வளர்ந்த குஞ்சுகட்குப் பறக்கவும் இரை தேடவும் கற்பிக்கின்றன. குஞ்சுகள் தாமே சென்று இரை தேடிப் பிழைக்கும்வரை பறவைகளின் கவலை நீங்குவதில்லை. ஆனால், விலங்குகளிடத்தும் பறவைகளிடத்தும் காணப்படும் இவ்வன்பு நீடித்திருப்பதில்லை. பசு அடுத்த கன்று ஈன்றால் தன் அன்பு முழுவதையும் தன் புதிய கன்றினிடத்தே திருப்பி விடுகின்றது. ஆனால், முன்னர்க் கூறியவாறு மனிதனிடத்தே தான் இவ்வன்பு அவனது ஆயுட்காலம் முடியும்வரை நீடித்துள்ளது. இவ்வன்பு கைம்மாறு கருதாத அன்பாகும். மனிதனாவது தன் மக்களால் பிற்காலத்தில் தனக்கு நன்மை கிடைக்குமென எதிர்பார்க்கக்கூடும். ஆனால், விலங்குகளும் பறவைகளும் அவ்வாறு எதிர்பார்ப்பதற்கில்லை. இயற்கையான இவ்வன்பை இறைவன் விதித்திராவிடின் மக்களினமும் மற்றைய உயிர்களும் பெருகுதல் இயலுமா? நம் நாட்டின் மக்கட்டொகை ஆண்டுதோறும் ஒருகோடி அதிகரிக்கிறதெனக் கூறப்படுகின்றது. அதுதானும் இவ்வன்பு இல்லாவிடில் இயலுமா?

இத்தகைய அன்புடன் நம்மைப் பேணிவளர்த்த நம் பெற்றோர்களிடத்தில் நாமும் அன்புபாராட்டல் நமது பெருங்கடமையாகின்றது. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதற்கேற்ப அவர்களிருவரும் நாம் நாடோறும் கண்ணால் கண்டு வழிபடுதற்கேற்ற தெய்வங்களாக உள்ளனர். நாம் என்ன செய்யினும் அவர்கள் நமக்குச் செய்துள்ள உதவிக்கு அது ஈடாகாது. ஆகவே, அவர்கள் உள்ளளவும் நாம் அவர்கள் மனத்தைப் புண்படுத்தாத முறையில் நடக்க முயலவேண்டும். ஆனால், பல பெற்றோர்கள் நன்றியில்லாத மக்களைப் பெற்றுள்ளதைக் காண்கிறோம். 'பெற்றமனம் பித்து பிள்ளைமனம் கல்' என்னும் பழமொழி இதனை வலியுறுத்தும். பெற்றோர் செய்த நன்றியை மறந்ததோடு அவர்களைக் கைநீட்டி அடிக்கும் பெற்றியரான மக்களை என்னென்றுரைப்பது?

இனி, அன்புடைமையையே சிறந்த பண்பாகக் கொண்ட இல்லற மாந்தர் தம் கடமை யென்ன? விருந்தோம்பல் அவரது முதல் அறமாகும். 'விருந்தெதிர்கோடலும் இழந்தவென்னை'

என்று கோவலனைப் பிரிந்து வருந்தும் கண்ணகியார் கூறுகின்றார். இல்லறவாழ்க்கையை மேற்கொள்வது விருந்தோம்புவதற்கே என்று நாயனார் அருளுகின்றார். விருந்தினர் அனிச்சப் பூவை நிகர்த்தவர்; முகந்திரிந்து நோக்கினால் அவரது மனம் வருந்தும். ஆகவே, விருந்தினரிடத்தில் இன்முகத்துடன் அன்புடன்பேசி அவரை உபசரித்தல் இல்லறத்தாரின் கடமையாகும்.

நம் நாடு வறுமை மிகுந்த நாடு. பிறநாடுகளில் பிச்சைக்காரர்கள் ஒழிந்து, பிச்சையெடுப்பது குற்றமாகக் கருதப்படும் இந்நாளில், நம் நாட்டில் கோடிக்கணக்கில் பிச்சைக்காரர்கள் உள்ளனர். பிச்சையிடுவது அறமென்றும் அதனால் மேலுலகில் இடங்கிடைக்குமென்றும் நம்புவதாகிய கொள்கை இந்நாட்டில் பாமரமக்களிடையே நிலவியுள்ளதால் நம் நாட்டுப் பிச்சைக்காரர் உயிரோடு வாழ்கின்றனர். பிச்சைக்காரர் ஒழிக்கப்பட வேண்டியவர்தாம்; அவர்கள் இருப்பது சமூகத்திற்கே பெரிய இழிவுதான்; எனினும், ஓரிருவர் கூடி முடித்துவிடக்கூடிய செயலன்று அது; அரசியலார் மேற்கொள்ளவேண்டிய முயற்சியாகும். அம்முயற்சி தோன்றி நிறைவேறும்வரை, இல்லற வாழ்வில் ஈடுபட்ட நாம் அவர்கட்கு உதவிசெய்யும் கடமையினுள்ளோம். பிச்சை யேற்பதை எவரும் மேற்கொள்ளார். இல்லாமையே அத்தொழிலில் ஈடுபடுவதற்கு ஏதுவாகும். ஆதலின், வறியரான அவர்கட்குக் கொடுத்தலே ஈகையாகும். ஏற்பது இகழ்ச்சியாயினும் ஏற்பவர்க்கு இல்லையென்னல் அதனினும் கீழ்ப்பட்டதாகும். 'ஈயென இரத்தல் இழிந்தன்று, அதனெதிர் ஈயேனென்றல் அதனினும் இழிந்தன்று' என்று கூறுகின்றார் கழைதின் யானையார் எனப் பெயரிய ஒரு சங்கப் பெரியார். எனவே, இல்லாதாராகிய பிச்சைக்காரர்க்கு நம்மாலான உதவியை அன்புடன் செய்தல் இன்றியமையாததாகின்றது.

பொதுவாக நம்மைப்போன்ற மக்களையும் பிறவுயிர்களையும் அன்புடன் நேசித்தல் நம் கடன்.

இனி, மேற்கூறிய வண்ணம் நம்மிடத்தே அன்புடைமை நிலைபெற்றிருத்தல் இன்றியமையாததாயினும் இவற்றையெல்லாம்விட மிகச்சிறந்ததோர் அன்பை மேற்கொள்ளுதல் நம் தலைசிறந்த கடமையாகின்றது. அதுதான், நம்மையெல்லாம் படைத்து அருள்புரிகின்ற இறைவனிடத்தில் நாம் செலுத்த வேண்டிய அன்பாகும். தாய் தந்தையரிடமே நன்றி பாராட்டுவது நம் கடனாயிருக்க, உலகங்களுக்கெல்லாம் தாயுந் தந்தையுமா

யுள்ள இறைவனிடம் நாம் அன்பு பூண்டிருத்தல் தலைசிறந்த கடமையன்றோ? இனி, நன்றியில்லாத மகனைப்பெற்ற தாய் தந்தையர், 'அவன் நம்மைப் புறக்கணித்தானேனும், இறைவ னருளால் நன்கு வாழவேண்டும்' என வாழ்த்துவதைப் பார்க் கின்றோம். அங்ஙனமாக, விருப்பு வெறுப்பற்ற இறைவனுக்கு நாம் நன்றி பாராட்டுவதால் யாது பயன் என்ற வினா எழுகின் றது. இறைவன் நம் அன்பை எதிர்பார்க்கின்றானா? என்றால், இறைவன் எதிர்பாராவிடினும் நாம் நமது கடமையைச் செய்த லில் தவறுதல் ஆகாது. எனவே, நாம் இறைவனை வழிபடுதல் வேண்டும்.

நாம் இறைவனை வழிபடுவது எப்படி? ஒவ்வொரு சமயத் தினரும் ஒவ்வொரு வழிபாட்டுமுறையைக் கைக்கொண்டுள்ள னர். கிறித்தவர், முகமதியர் முதலியோர் தம் கோயில்களில் கூடியிருந்து வழிபடுகின்றனர். இந்துசமயத்தினர் என்று சொல்லப்படுகின்ற நமக்குள்ளும் பல்வகையான வழிபாட்டு முறைகளுண்டு. இந்து மதம் சைவம், வைணவம், சுமார்த்தம் முதலிய பல சமயங்களடங்கியது. இச்சமயத்தினரால் வழிபடப் படுகின்ற தெய்வங்களும் எண்ணிறந்தன. இச்சமயங்களுள் மிகப் பழமையானது சைவமே. சைவசமயமே இந்நாடு முழு வதும் ஒரு காலத்தில் பரவியிருந்தது எனலாம். மனிதன் காட்டுமிராண்டியாக வாழ்ந்த காலத்திலேயே சிவலிங்கவழிபாடு தோன்றியதெனலாம். உருவவழிபாட்டின் தொடக்கமே சிவ லிங்க வழிபாடாகும். உருவம் அமைக்குந்திறம் பெற்றிராத அக்காலத்தில் அமைக்கப்பட்ட வடிவமே சிவலிங்கமாகும். நாகரிகமும் அறிவும் பெருகிய பிற்காலத்தில்தான் அவ்வழிபாடு பற்றிய தத்துவம் முதலியன எழுந்தன. நம் முன்னோர் இறை வனைச் சோதிவடிவத்தில் வழிபட்டனரென்றும், அச்சோதி வடிவமே சிவலிங்க உருவமாகுமென்றும் பெரியோர் கூறுவர். சிவவழிபாடு தொன்மை வாய்ந்தது என்பதற்குச் சிவபெரு மானின் திருவுருவமேசான்றாகும். சடைமுடி, புலித்தோல் அல்லது யானையின்தோல், சூலம், வில் முதலியன மனிதன் தொடக்கத்தில் வேட்டுவவாழ்க்கை வாழ்ந்ததை நமக்கு அறி வுறுத்துவனவாகும். இடபவாகனமும் மனிதன் மாட்டைத்தான் இவர்ந்து செல்லும் ஊர்தியாகப் பயன்படுத்தியமையைக் குறிக் கும். மனிதனுக்குக் கடவுளுணர்ச்சி வந்த முதற்காலத்தில் தன் உருவத்தையே இறைவனுக்கும் ஏற்றி வழிபட்டானாதல் வேண் டும். இனி, நம் வழிபாடும் பொதுவாக இறைவனுக்குத் திரு முழுக்காட்டிப் பச்சிலையிடுதலும், உணவுபடைத்தலும், வாயாரத் துதித்தலும் ஆகும்.

'யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை'

என்றார் திருமூலர்.

'சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்,
தமிழோ டிசை பாடல் மறந்தறியேன்'

'பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே'

'வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே'

என்பன திருநாவுக்கரைய தேவர் திருவாக்காகும். எனவே, பண்டைக்காலந்தொட்டு இவ்வழிபாட்டுமுறை வழங்கி வருகின்றது. கோயில்கள் விரிவாகக் கட்டப்பட்டு, ஆகமங்கள் எழுதப்பட்டபின் இவ்வழிபாட்டுமுறை மிக்க விரிவடைந்தது. திருமுழுக்கு, தூபம், தீபம் முதலியன விரிந்தன.

இனி, தம் வீடுகளிலே வழிபடுவோர் படங்களையோ, இறைவனது திருவுருவங்களையோ வைத்து மேற்கூறியபடி வழிபாடு செய்கின்றனர். மேலும்,

'காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே'

என்று அப்பரடிகள் கூறியாங்கு உள்ளத்தால் இறைவனை நினைந்து மனமுருகிப் பூசனை புரிவாருமுண்டு.

இத்தகைய வழிபாட்டு முறைகளிலே எவரெவர் எதனை விரும்புகின்றனரோ அதனைச் செய்யக் கடவர். எம்முறையைப் பின்பற்றினபோதிலும் உள்ளன்பில்லாமல் செய்யப்படும் பூசனையும் வழிபாடும் பயனற்றனவாகும். பூசனை, வழிபாடு செய்பவர்களில் உள்ளன்போடு ஒன்றி நினைந்து வழிபாடு புரிவோர் எத்தனைபேர் என்றால், அது மிகக் குறைவாக இருக்குமென்பதை யாவருமறிவர். கோயிலுக்குச் சென்று வழிபடுபவர்களில் பெரும்பான்மையோர் சுற்றிலுமுள்ள காட்சிகளில் மனதைப் பறிகொடுத்து இறைவனை வழிபடுவதுபோல் பாசாங்கு செய்பவர் ஆவர். திருவிழாக்காலங்களிலே உண்மையான கடவுளன்புடன் செல்பவர்களைவிட வேடிக்கைபார்க்கச் செல்வோரும், தீய எண்ணங்கொண்டு செல்வோருமே பன்மடங்கினர் ஆவர். கோயில்களிலே பூசைசெய்பவர்க்கு அது வயிற்றுப் பிழைப்பாதலின் செய்யவேண்டிய கட்டாயத்தின்மேற் செய்

கின்றார்களேயன்றிப் பெரும்பான்மையும் அன்பினாலன்று. வீட்டில் பூசை செய்வோரும் அப்படியே; பெரும்பாலோர்க்குக் கையொன்று செய்ய, வாயொன்றுகூற, மனமொன்று நினைக்க என்றிருக்குமே தவிர வேறன்று. இன்னும் சிலர் தாம் செய்த தீய காரியங்களுக்குக் கழுவாயாக அபிடேகம், ஆராதனை செய்கின்றனர்.

இத்தகைய வழிபாடுகளை இறைவன் ஏற்றுக்கொள்ளுகின்றானா? அன்றி இவற்றை அவன் விரும்புகின்றானா? அப்பரடிகள் கூறுகின்றார்கள்:

'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே.'

ஆகவே; தூயமனத்தால் நினைந்து நினைந்து உருகும் அடியாரது உள்ளக்கமலத்தில் உறையும் இறைவன், போலிப் பூசை செய்து உலகை ஏய்க்கும் கயவரது அறியாமையைக்கண்டு நகையாடுவான்.

பின்னர் உண்மையான வழிபாடு யாதெனின் தனியிடத்திற்சென்று, இறைவனை நினைந்து சிறிதுநேரமேனும் மனத்தை ஒருவழிப்படுத்தி வழிபடவேண்டும். தனியிடம் ஏனெனின், கூட்டத்தில் நம் சிந்தை சிதறுதல் கண்கூடு ஆதலின், எங்கும் நிறைந்து மறைந்துள்ள இறைவனை நாம் மறைந்து வழிபட்டால், அதனை அறிவானல்லனோ? வேண்டத்தக்க தறிவோனும், வேண்ட முழுதும் தருவோனுமாகிய இறைவனை, 'யான்செய்யும் பிழைகளைப் பொறுப்பாய்; பிழைசெய்யாமற் றவிர்ப்பாய்' என்று வேண்டலாகும். அன்றி, அடியார்களுடைய திருவாக்குகளிலே நாம் பாடுவதற்கு ஏற்றவைகளைத் தேர்ந்தெடுத்துப் பாடலாம். அப்படிச் செய்யுங்கால் அவற்றின் பொருளறிந்து பாடவேண்டும்; இசையில் மனதைச்செலுத்திப் பாட்டையும் இறைவனையும் மறந்துபோகலாகாது.

இனி, நாம் கடவுளிடத்து அன்புபூண்டுள்ளோம் என்பதை வெளிக்காட்டுதல் கருதி நடுத்தெருவில் நின்று ஆடிப்பாடுவதும், பல்வகையான வேடங்களைத் தரிப்பதும் வேண்டற்பாலனவேயல்ல. மறைந்து எங்கும் நிறைந்துள்ள இறைவன், நாம் தனிமையில் வழிபட்டால் அறிவான்; அருள்புரிவான்.

கடவுளிடத்து அன்புபூண்டவராகத் தம்மைப் பல்வகையாலும் காட்டிக்கொள்ளும் பலர் தம்மைப்போன்ற மக்களிடத்தே சிறிதும் அன்பில்லாதவராயுள்ளனர். கண்ணால் காணக்கூடிய மக்களை நேசிக்க இயலாதவர், காண இயலாத இறைவனை நேசிப்

பதாகக் காட்டுகின்றனர். இவர்களது கடவுட்பத்தி போலியே யாகும். மக்கள் நடமாடும் கோயில்களாவார்கள், அன்பினுல் நினைவாரது உள்ளத்தே இறைவன் உறைதலின். எனவே, மக்களை விரும்பாதவர், வெறுப்பவர் எங்ஙனம் கடவுளை நேசித்தல் கூடும்? தன்னைப்போல் மன்னுயிர்களையும் நேசித்தலாகிய உயர்ந்த பண்புதான் எல்லாச் சமயத்தாராலும் போற்றப்படுவதாகும். அத்தகைய அன்புபூண்டாரையே இறைவனும் விரும்புவான். மக்களிடத்து அன்பு பாராட்டும் ஒருவன், இறைவனிடத்தே உண்மையான அன்புபூண்டவனுவான். இதனை ஒரு சிறு வரலாறு விளக்கும்.

யூதமன்னன் அபூ என்பான் தன் அறையில் ஓரிரவு உறங்கி விழித்தபோது தன் எதிரே ஒரு தெய்வம் ஒரு புத்தகத்தில் ஏதோ எழுதிக்கொண்டிருப்பதைக் கண்டான். கண்டவன் அதனை நோக்கி அது எழுதியதென்னவென்று கேட்க, அத்தெய்வம் தான் கடவுளிடத்து அன்புபூண்டவரின் பெயர்களை எழுதுவதாகக் கூறியது. தன் பெயர் அவ்வரிசையிலுளதாவென வினவினுன் அரசன். இல்லையென மறுமொழி தந்தது அத்தெய்வம். சிறிது மனங்கலங்கிய மன்னன், பின்னர், அத்தெய்வத்தை நோக்கித் தன்னை மக்களை நேசிப்போர் வரிசையில் சேர்க்குமாறு வேண்ட, தெய்வமும் அவ்வாறேசெய்து மறைந்தது. மறுநாளிரவு தெய்வம் மீண்டும் மன்னனது அறைக்குள் பேரொளியுடன் தோன்றி, இறைவனது அருள்பெற்ருேர் பெயர்களைக்காட்டியது. அப்பெயர் வரிசையில் தன் பெயர் முதலில் இருப்பதைக்கண்ட அபூ மன்னன் பேருவகைபூத்தான். இக்கதையினுல், நாம் மக்களிடத்தே அன்புகாட்டுவது இறைவனிடம் அன்புகொள்வதையொக்கும் என்பது விளங்கும். எனவே, மனிதர்களிடத்திலே அன்புபாராட்டாதவன் இறைவனிடத்தில் அன்புபூண்பதென்பது போலியுரையேயாகும்.

‘அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்திலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே’

என்று திருமூலரும், ‘என் சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே’ என்று தாயுமானுரும் அருளியுள்ளமை நோக்கத்தக்கது. அன்புவடிவமாகவும் அறிவுவடிவமாகவும் எழுந்தருளியுள்ள இறைவனது அருளைப்பெறவேண்டுமெனின் எல்லாவுயிர்களிடத்தும் அன்பாயிருத்தல் வேண்டும். பிறவுயிர்களிடத்து அன்புபூண்டிருத்தலே இறைவனுக்கு நாம் செய்யக்கூடிய உண்மையான பூசனையாகும்.

(தொடரும்)

# திருக்கோவையார்

[வித்துவான், பாலூர், D. கண்ணப்ப முதலியார்]

(செல்வி, சிலம்பு-௨௧, பரல்-௫, பக்கம் ௨௬௨-ன் தொடர்ச்சி)

இக்கருத்தை மாணிக்கவாசகர் கற்றார் ஏத்தும் கலித்தொகையில் இருந்து எடுத்தனர் என்பது.

‘பலவுறும் நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செயும்
நினையுங்கால் நும்மகள் நுமக்கும்ஆங் கனையளே.

சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செயும்
தேருங்கால் நும்மகள் நுமக்கும்ஆங் கனையளே.

ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செயும்
சூழுங்கால் நும்மகள் நுமக்கும்ஆங் கனையளே.’

என்னும் பாடலால் உணரலாம்.

கற்புப்பற்றிய சீரியகருத்து திருக்கோவையாக காணப்படுவது போன்று வேறு எந்த நூலிலும் காண்டற்கு இல்லை. நாம் கற்பு என்பது பெண்மக்கள் சமூகத்திற்குரிய பண்பு என்று கருதி இருக்கிறோம். அது தவறான எண்ணமாகும். கற்பு என்னும் சொல் ஒழுக்கம் என்னும் பொருளில் ஒளிர்வதனால் அவ்வொழுக்கம் ஆண்மக்கள் இனத்திற்கும் பொருந்துவதாகும் என்று கருதாதது நம் தவறே அன்றோ. இதனை இந்நூலாசிரியர் எவ்வளவு நாகரிகமாக மொழிகின்றார் என்பதை இப்பொழுது உணர்வோமாக.

நற்றாய், தன் மகளைப்பற்றி முக்கோல் பகவரை முன் வினவியதைப்பார்த்தோம். அவர் அவளுக்கு ஏற்ற விடை கூறியதையும் உணர்ந்தோம். என்றாலும் நற்றாய் உள்ளம் அமைதி பெற்றிலது. அந்நிலையில் இருவர் ஆணும் பெண்ணுமாகச் சேய்மையிலிருந்து தன் திசைநோக்கி வருதலைக் கண்டாள். கண்டதும் தன் மகளும் மகனை அழைத்துச்சென்ற மருகனும் தாம் மீண்டுவருகின்றனர் என்று எண்ணி மனம் மகிழ்ந்தாள். ஆனால் அவர்கள் அண்மியதும் தன் மகள்அல்லள் என்று உணர்ந்தும், தன் ஆராமை மிகுதியால், ‘மணமக்களே! நீங்கள் வரும்வழியில் உம் எதிரே உம் போலும் காதலுடைய இரு இளைஞர் ஆணும் பெண்ணுமாகப் போனதுண்டோ?’ என்று

வினவினள். அதற்கு விடை கூறும்போது ஆண்மகனான காளை தன்னைத் தொடர்ந்துவரும் காதலியை நோக்கி, 'நான் ஆண் சிங்கம் போன்ற காளையைக் கண்டதுண்டு. அதனோடு வேறு ஒன்றையும் இந்த அம்மையார் கூறுகின்றாரே? நீ அதேசமயத்தில் வேறு யாரையேனும் கண்டதுண்டோ?' என்று வினவுவதிலிருந்து அவ்வாண்மகன் ஆணையே பார்த்தனன் என்பதும், அவனுக்கு அயலேவந்த பெண்மகளைத்தான் ஏறிட்டும் பார்த்ததில்லை என்பதும் விளங்குவதால் அவனது கற்பொழுக்கம் நமக்கு எத்துணைக் கழிபேர் இன்பம் பயக்கவல்லதாக இருக்கிறது பாருங்கள்.

> "பிறன்மனை நோக்காத பேர்ஆண்மை சான்றோர்க்கு
> அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு"

என்றும் திருக்குறள் செப்புவதும் இதுதானே. இந்தக்கருத்தைத் திருக்கோவையார் எத்துணையழகாக,

> "மீண்டார் எனஉவந் தேன்கண் டும்மைஇம் மேதகவே
> பூண்டார் இருவர்முன் போயின ரேபுலி யூர்எனைநின்
> றாண்டான் அருவரை ஆளியன் னானைக்கண் டேன்அயலே
> தூண்டா விளக்கனை யாய்என்னை யோஅன்னை சொல்லியதே"

என்று எடுத்துக்காட்டுகிறது.

'நுண்ணறிவுடைய் நூலொடு பழகினும் பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்து' என்று கூறிப் பெண்ணுலகத்திற்கு ஒரு பழியைப் பிற்பட்டவர் ஏற்படுத்தியுள்ளார். அவ்வாறு நாம் கருதுதற்கில்லை. அவர்களும் ஆண்களைப்போலவே பேர்அறிவு படைத்தவர். சொல்லாற்றலோடு பேசவல்லவர். அவர்கள் பேச்சுத்திறன் மிகமிக வியக்கத்தக்கதாக இருக்கும். இதனை அறிய வேண்டின் திருக்கோவையாரைப் படிமின். தலைமகன் தலைவியைத் தான்கூடி இன்புறுதற்கு வாய்ப்புக் கிடைக்காவிடின் மடல்ஏறித் தற்கொலை புரிந்துகொள்வதாகத் தோழியிடம் மொழிகிறான். மடல் என்பது பனையோலையாலும் மட்டையாலும் செய்யப்படும் குதிரையாகும். அதைச் செய்யவேண்டுமானால் பனைஓலையையும் மட்டையையும் மரத்திலிருந்து வெட்டி எடுத்தல்வேண்டும். பொதுவாகப் பறவைகள் பனைமரத்தில் கூடுகட்டி வாழும் இயல்பின.

இந்நிலையில் தோழி தலைவன் எண்ணியுள்ள மடல் ஏறும் எண்ணத்தை நீக்கவேண்டியவளாய் இருக்கிறாள். 'மடல் ஏறற்க' என்று மொழியின், அவன் தலைமகள்பால் வைத்த காதல் மிகுதியால் அவ்வெண்ணத்தை நீக்கமாட்டான். இதனை எந்தமுறையில் எடுத்து இயம்பினால் அவன் மடல்ஏறுதலைத் தடுக்க இயலும்

என்பதைச் சிந்தித்துத் தன் பேச்சுத்திறனால் அதனை விலக்க முன்எழுந்த தோழியின் வன்மையை என் என்பது.!

தோழி தலைவனைப்பார்த்து, 'ஐய ! நீ மடல்ஏறத் துணிந் தனை. அம்மடற்கு வேண்டிய ஓலையும் மட்டையும் மரத்தில் இருந்து எடுக்கவேண்டியவை. அப்படி எடுத்தால் அம்மரத்தில் கூடுகட்டி இன்புடன் வாழும் பறவைகட்கு இன்னல் செய்தவ னாய் ஆவையே. இவ்விரக்கம் உனக்குத் தோன்றவில்லையானால் வேறு யாரிடத்தில் தோன்றப்போகிறது,' என்னும் பொருளில்,

"நடனும் வணங்கும்தொல் லோன்எல்லை நான்முகன் மால்அறியா
கடனும் உருவத் தரன்தில்லை மல்லல்கண் ஆர்ந்தபெண்ணை
உடனும் பெடையொடொண் சேவலும் முட்டையும் கட்டழித்து
மடனும் புனைதரின் யார்கண் ணதோமன்ன இன்னருளே"

என்று கூறி மடல் விலக்கினாள். திருக்கோவையார் சிறந்த இன்ப நூல். இச்சிற்றின்பத்தின் பெற்றியைத் தெள்ளத் தெளியப் பாடிய பாட்டைப் படிக்குந்தோறும் கழிபேர் இன்பம் தோன் றும் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. சேரச் சேரச் செடி யும் பகை என்னும் பழமொழியும் பொய்க்கும்படி தலைமகளைச் சேரச் சேரப் புதுப்புது இன்பம் தோன்றி அவ்வின்பம் வளர் கின்றது என்பதைத் தக்க உவமைகொடுத்து உரைத்திருப்பதை என்னென இயம்பவல்லோம்.

"உணர்ந்தார்க் குணர்வரி யோன்தில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாய்இக் கொடியிடை [தோள்
புணர்ந்தால் புணரும் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாள்அல்குல் போல வளர்கின்றதே"

இப்பாட்டைப் படித்துப் படித்துச் சுவைக்க.

இங்ஙனம் சிற்றின்பநிலையை இத்துணைச் சிறப்பாக எடுத்து ஓதவல்லார் ஆயினும் பேர்இன்பச் சுவைக்குரிய குறிப்பினை இச் சிற்றின்பத் தொடர்போடு கூறாமல் இருந்திலர். தலைமகளின் கண்களைப் புனைய வருகின்றார் புலவர்பெருமான். அவற்றின் அகற்சி, நீளம், ஒளி, நிறம், ஆகியவற்றை உவமை கூறி இவர் உரைப்பதை உன்னிஉன்னிப் பார்ப்போமாக. அவற்றின் அகற் சிக்கு, ஈசன் இடத்துவைத்த அன்பின் அகலம் உவமையாயிற்று. அவற்றின் கருமைக்குப், பாசத்தின் நிறம் பொருளாயிற்று. அவற்றின் ஒளிக்குத், தில்லைஒளி உதாரணமாயிற்று. அவற்றின் வெண்மைக்குத், திருநீறு எடுத்துக்காட்டாயிற்று. நீட்சிக்கு, அன்பர் இறைவன் திருவடிகளைப் புகழும் புகழ்உரைகள் உவமை யாக நின்றன.

" ஈசற்கி யான்வைத்த வன்பின கன்றவன் வாங்கியென்
பாசத்திற் கார்என் றவன்தில்லை இன்ஒளி போன்றவன்தோள்
பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த்தை யிற்பெரு நீளம் பெருங்கண்களே "

என்பது அப்பாடல். இன்னணம் சிற்றின்பத்துறையிலும் பேரின்ப நிலையினைத் துய்க்கும் பெரியவர்களை நினைவினில் வைத்தன்றோ நம் சித்தாந்தப் பெருநூலாகிய சிவஞானசித்தியாரும்,

" நாடுகளில் புக்குழன்றும் காடுகளில் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் சித்தராய் இருந்தும்
நின்மலஞா னத்தையிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிதியின் படுகடைக்கே கிடந்தும்இறை ஞானம்
கூடும்வர் கூடறிய வீடுமதும் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர் "

என்று கூறிக் களிக்கின்றது. இதனை இன்னமும் விளக்க விரும்பிய முற்றுந்துறந்த முனிவராம் பட்டினத்தடிகளார்,

" அஞ்சொல் மடந்தையர் ஆகந் தோய்ந்தும்
சின்னம் பரப்பிய பொன்னின் கலத்தில்
அறுசுவை அடிசில் வறிதினி தருந்தா
தாடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்
பூசுவன பூசியும் புனைவன புனைந்தும்
தூசு நல்லன தொடையில் சேர்த்தியும்
ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்தும்
மைந்தரும் ஒக்கலும் மகிழ மனமகிழ்ந்
திவ்வகை இருந்தோம் ஆயினும் அவ்வகை
மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழி செலுத்தலின் அந்த
முத்தியும் இழந்திலம் முதல்வ "

என்று பாடிய பாட்டையும் படிப்போமானால் இதன் உண்மையை நன்கு உணரலாம்.

சிற்சில பழங்காலச் சரித்திர ஆராய்ச்சிக்குரிய குறிப்புக்களும் திருக்கோவையாரில் ஆங்காங்குச் சிதறுண்டு கிடக்கின்றன. அவற்றுள் ஒன்று தில்லைக்கோவிந்தராஜப்பெருமாளைக் குறித்ததாகும். கோவிந்தராஜப்பெருமாள் இப்பொழுது பொற்சபைக்கு நேரே காலைநீட்டிச் சயனத்திருக்கும் காட்சியை இன்றும் நாம் காணலாம். இப்படித் திருமால் படுத்திருக்க நடராஜப்

பெருமான் நடிப்பது குறித்து வைணவ அன்பர்கள் பெருமை யாகப் பேசிக்கொண்டு எங்கள் பெருமாள் கால்மாட்டில் கூத்தர சன் கூத்தாடுகிறுன் என்று ஏளனம் செய்ததாகவும் நாம் கேட்டுவருகிறோம். இவ்வேளன மொழிக்குத் தனிப்பாடல் திரட் டும் திருஒற்றியூர்க் கலம்பகமும் முறையே,

"ஆட்டுக் கிசைந்தவர் அம்பலவாணர் அவர்க்கெதிரே
நீட்டிற்று மால்வட பாலினில் கால்என நீநினையேல்
சூட்டுற்ற முப்புர மும்செற் றவர்தம்மைச் சுமந்தலுத்த
மாட்டுக்கென் ஞேஇடம் கால்நீட்டல் சொல்ல வழக்கில்லையே"

எனவும்,

"தவம்நிவக்கும் திருஒற்றித் தனிமுதலே அன்றுதில்லை தன்னில்சார்ந்து
சிவசிவென முழங்குறுமத் தளத்தவரால் உதையுண்டு சீவன்போன
சிவமென்வீழ்ந் தின்றளவும் கிடக்கும்மா லைச்சிலர்தம் சாமிஎன்ன
நவமுறுத்திப் பணிவதவ னலிவதனக் கேதுஎன நவிலலாமே"

எனவும், பாடியிருப்பதை நாம் படித்தும் இருக்கிறோம். ஆனல், மாணிக்கவாசகர் காலத்தில் திருமால் பொற்சபைநோக்கித் தன் திருமுடிவைத்துப் படுத்திருக்கவேண்டும் என்பது அவர் பாடியிருக்கும் பாட்டால் அறிகிறோம்.

புரங்கடந் தான்அடி காண்பான் புவிவிண்டு புக்கறியா
திரங்கிடெந் தாய்என் றிரப்பத்தன் ஈரடிக் கென்இரண்டு
கரங்கள்தந் தான்ஒன்று காட்டமற் றாங்கதும் காட்டிடென்று
வரங்கிடந் தான்தில்லை யம்பல முன்றில்அம் மாயவனே.

என்னும் பாட்டினின்று இக்குறிப்பை நோக்குக. இக்குறிப்பு எத்துணைச் சிறந்த குறிப்பென ஓர்க. இதுபோல் மாறுத லுற்ற கோயில் அமைப்புகள் பல உண்டு.

தமிழ்மொழியில் முற்றறிவு பெருது அரைகுறையாகப் படித்து ஆங்கிலம் உணர்ந்து தமிழர் எனச்சொல்லித் தருக்கித் திரியும் சில்லோர், தமிழில் குறைகாண முற்படுவது இக்கால நாகரிகமாக இருக்கிறது. அவர் கூறும் குறைகளில் தமிழ் இலக்கியங்களில் (humour) நகைச்சுவை இல்லை எனக் கூசாமல் கூறுவது ஒன்றாகும். என்னே அவர்தம் அறியாமை! இலக்கண நூற்களில் வரும் சூத்திரங்களுக்கே நகைச்சுவை பொருள் காட்டி நகைக்கச்செய்யும் ஆற்றல்வாய்ந்த தமிழ்ப்பெருமக்கள், இலக்கியங்களில் அச்சுவையை அவர்கள் புகுத்தாமல் இருப் பரோ?

"முன்னிலை முன்னர் ஈயுமேயும்
அந்நிலை மருங்கின் மெய்யூர்ந்து வருமே"

என்பது தொல்காப்பிய நூற்பா. இது முன்னிலைச் சொற்கள் 'சென்றீ,' 'சென்மே' என வருதற்கு இலக்கணம் கூறும் முறையை அறிவிப்பதற்கு எழுந்ததாயினும், இதில் நகைச் சுவைப் பொருளையும் கண்டு ஏன் சுவைக்கக்கூடாது. 'உண்ணும் இலைக்கு எதிரே எறும்பு முதலியன ஊர்ந்துவருதலே அன்றி ஈயும் மேயும்; அப்படி மேய்தலோடு நில்லாமல், உடலினும் ஊர்ந்துசெல்லத் தொடங்கும்,' என்று வேடிக்கைப் பொருள்கூறிச் சுவைத்தால் என்ன தவறு ஏற்படும்? நகைச் சுவை தமிழ்நூல்களில் இல்லை எனக்கூற இயலுமா?

"நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகைஎன்
றப்பால் எட்டே மெய்ப்பா டென்ப"

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தில் நகைச்சுவையையன்றோ முன்னர்க் கூறப்பட்டுள்ளது. இவ் விலக்கணத்தை அறியாமையால் அன்றோ குறைகூறத் துணிக்கின்றனர். அவர்களை,

"எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத் தறிவார்க் காணின் இலையாம்"

என்னும் துறைமங்கலத்தார் தூய்மொழிகொண்டு அடக்கி மேலே செல்வோமாக. இனித் திருக்கோவையாரில் காணப் படும் நகைச்சுவை அறிந்து நனிவியப் படைவோமாக.

தலைவன் தோழியிடம் வந்து தலைவியின் கூட்டுறவைப் பெறுதற்கு அவளோடு பேசத்தொடங்கினன். அவன் கையில் பூந் தழைகொண்டு அவளை நோக்கி "அம்மையீர்! இவ்வழியே யான் எய்த அம்புபட்டு யானை ஒன்று போந்ததுண்டோ," என்று வினவினன். பிறகு தான் கொணர்ந்த பூந்தழையை ஈந்து இதனை நும் தலைவி அணியுமாறு செய்க என்று வேண்டினன். இப்படிக் கெஞ்சிக் கூத்தாடிநின்ற தலைவனைக்கண்ட தோழி அவன் செயலை எள்ளி நகையாடுவாள்போல,

'மைத்தழை யாநின்ற மாமிடற் றம்பல வன்கழற்கே
மெய்த்தழை யாநின்ற அன்பினர் போல விதிர்விதிர்த்துக்
கைத்தழை ஏந்திக் கடமா வினுப்க்கையில் வில்இன்றியே
பித்தழை யாநிற்ப ரால்என்ன பாவம் பெரியவரே'

என்று கூறிய கூற்று எத்துணை நகைச்சுவை பயக்கவல்லதாகக் காணப்படுகிறது பாருங்கள். 'கையில் வில்இல்லை. ஆனால் தழை இருக்கிறது. இப்படிப்பட்டவர் யானையை எய்ததாகக் கூறுகிறார். இக்கூற்றுத் தம்மைப் பித்தர் என்பதை அறிவித்து நிற்கிறது. பார்த்தால் பெரியவராய்க் காணப்படுகிறார். ஐயோ

பாவம்' என்னும் சொற்கள் அன்றே நம்மை விடாநகைப்பு நகைக்கச் செய்கின்றன.

இன்னோரன்ன சீரிய பொருள்களைப் பயந்து திருக்கோவை இருத்தலின் இதனை,

'ஆரணங் காண்என்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின்
காரணங் காண்என்பர் காமுகர் காமநல் நூலதென்பர்
ஏரணங் காண்என்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே'

என்று கூறிய தற்சிறப்புப்பாயிரப் பாடலை மீண்டும் பாடி மகிழ்வதில் இழுக்கொன்றும் இராதென்னும் துணிபுடையேன்.

இதுகாறும் நூலின் சிறப்பை உணர்ந்தோம்; இனி நூலின் உரைச்சிறப்பையும் சிறிது உற்றுநோக்குவோமாக.

நூலாசிரியரைப்பற்றிய கருத்துவேற்றுமை எத்தனை உண்டோ அத்துணை வேற்றுமை இந்நூலிற்கு உரைவகுத்த ஆசிரியரைப்பற்றியும் உண்டு. பலருடைய எண்ணம் இந் நூற்கு உரை எழுதியவர் பேராசிரியர் என்பது. தஞ்சை வாணன் கோவை உரைகாரர், சேனாவரையர் உரை என்று செப்புகின்றனர். திருவாவடுதுறை ஆதீனத்து வித்துவானாய் விளங்கிய திரு. தாண்டவராய சுவாமிகளும், திரு. மகாவித்து வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களும், திரு. தியாகராசச் செட்டியார் அவர்களும், திரு. சுப்பராயச் செட்டியார் அவர்களும், திரு. முருகையப் பிள்ளையவர்களும் நச்சினார்க்கினியர் இந் நூலுக்கு உரை வகுத்தனர் என்று ஒருசேரக் கருதி இருந்தனர்.

இக் கருத்துவேறுபாட்டில் நம் கருத்தைச் செலுத்தாது உரையில் காணும் நயங்களில் சிலவற்றைமட்டும் ஈண்டு உணர்த்துவோமாக.

"திருவளர் தாமரை" என்னும் முதற்பாடற்கு உரை கூறுகையில் தம் திறன் எத்தகையது என்பதை நன்கு தெரி வித்துள்ளார். அப் பாட்டில் தாமரைக்கு திருவளர் என்றும், காவிகட்குச் சீர்வளர் என்றும், குமிழுக்குக் குருவளர் என்றும், காந்தட்குப் பை என்றும் அடைகொடுத்தாற்போல கோங்கு என்னும் மலர்க்கு அடைகொடாமல் கொடுத்தற்கு உரை கூறு கையில், 'மகளிர்க் குறுப்பில்' சிறந்த உறுப்பாகிய, முலைக்கு உவமையாகப் புணர்க்கப்பட்ட கோங்கிற்கு அடைகொடுக்கக் கடவதன்றே எனின், அடை கொடுப்பின் பிற உறுப்புக்க ளூடன் இதனையும் ஒப்பித்ததாம் ஆதலின் இதற்கடை கொடா மையே முலைக்கு ஏற்றத்தை விளக்கி நின்றது, என்று உரை

வகுத்தார். 'கூத்தப்பிரான்' என்னும் தொடர்க்குச் கூத்தனுயினும் பிரானுய் உள்ளான் என்று கூறுவர்.

'புரங்கடந்தான்' என்னும் பாடற்குரிய பொருளைப் படித்துச் சுவைக்கவேண்டியதாகும். திருமாலும் பிரமனும் இறைவன் திருவடியையும் திருமுடியையும் தேடிக் கண்டிலர் என்பது எவரும் அறிந்தவரலாருகும். இதனைப் புலவர் பெருமக்கள் பலவாறு சுட்டிப்பேசுவர். சைவ எல்லப்ப நாவலர் தம் அருணைக் கலம்பகத்தில்,

" மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரும் மாதவனும்
அணிகொண்ட புண்டரிகம் அகலாத சதுமுகனும்
ஞானக்கண் அதுகொண்டு நாடுமா றுணராதே
ஏனத்தின் வடிவாகி எகினத்தின் வடிவாகி
அடிதேடி அறிவல்லன அவனிஎலாம் முழுதிடந்தும்
முடிதேடி வருவல்லன மூதண்டம் மிசைப்பறந்தும்
காணரிய ஒருபொருள்"

என்றனர். மாலும் அயனும் இறைவனைக் காணுமைக்கு ஞானக்கண் இன்மையே காரணம் என்பது சைவ எல்லப்பநாவலர் கருத்து. திருக்கோவையார் உரையாசிரியர் கூறும் நயம் பலகால் சுவைத்துப் பயன் அடையவேண்டி இருக்கிறது. அன்னத்திற்கும் தாமரைக்கும் தொடர்புண்டு. அதுபோலவே காட்டிற்கும் பன்றிக்கும் இயைபுண்டு. இந்தத்தொடர்பை உணராத காரணத்தால்தான் இவ்விருவரும் இறைவனைக் கண்டிலர் என்று இயம்புகிறார் உரைஆசிரியர். அன்னம் திருவடியாகிய தாமரையை நாடியும், பன்றி சடையாகிய காட்டையும் நாடிச் சென்றிருத்தல்வேண்டும் என்பது இவ்வுரையாசிரியர் கருத்து. அவ்வாறு இன்றிப் பன்றி திருவடித்தாமரையையும், அன்னம் சடைக்காட்டையும் நாடியது தவறு என்றுகூறி நகைப்பார் போல, புரங்கடந்தான் அடிகளைக் காணுமாறு வழிபட்டுக் காண்கையாவது, அன்னத்திற்குத் தாமரையும் பன்றிக்குக் காடும் ஆதலால், இவர் இங்ஙனம் தத்தம் நிலைப்பரிசே தேடுதல். இவ்வாறு தேடாது தமதகங்காரத்தினுல் மாறுபட்டுப் பன்றி தாமரையும், அன்னம் காடுமாகப் படர்ந்து தேடுதலாற் கண்டிலர் இது நெறியல்லா நெறியாயினவாறு." என்று உரை எழுதினர். இன்னோன்ன நயமுடை உரைகள் பல இருத்தலின் மூலநூலைப் படித்து இன்புறுமாறு வேண்டிக்கொள்கிறேன்.

# கற்பின் தெய்வம்

[வித்துவான், கா, பொ. இரத்தினம் அவர்கள் B.A. (Hons), B.O.L.]

உலகத்திலுள்ள மக்கள் யாவரும் இல்லற நெறியில் அல்லது துறவறநெறியில் வாழ்ந்து வருகிறார்கள். இந்த இரு நெறிகளுள்ளும் சிறந்தது இல்லறநெறியே என்பதனை நம் முன்னோர் நன்கு அறிந்திருந்தனர். மிகப் பழங்காலந்தொடக்கம் அவர்கள் இல்லறநெறியினைப் போற்றிவந்திருக்கிறார்கள். தொடக்கத்திலே தமிழ்மக்களிடையே இருந்த துறவறநெறி, இல்லறத்தின் பின் மேற்கொள்ளப்பட்ட நெறியாகவே இருந்ததென்பதைப் பழந்தமிழ் இலக்கணநூலாகிய தொல்காப்பியம் தெளிவாக உரைக்கின்றது. இப்பொழுது இருப்பதுபோல், இல்லறமும் துறவறமும் ஒன்றுக்கு ஒன்று மாறாகத் தமிழ்நாட்டில் இருக்கவில்லை. இரண்டும் சீரிய வாழ்வின் இருபகுதிகளாகவே இருந்தன. பெண்ணைப் பேயெனக் கருதி ஒதுக்கும் அறியாமை, இடைக்காலத்திலே ஏற்பட்டது. ஆரியர்களுடைய தொடர்பு ஏற்பட்டபின் தமிழ்நாட்டில் துறவறநெறி தனிநெறியாக—இல்லறத்துக்கு மாறான நெறியாக விளங்கிற்று; எனினும், இத்துறவற நெறியிலும் இல்லறநெறியே சிறந்ததென்பதைத் தமிழ்மக்கள் பல வழிகளிலே புலப்படுத்தியுளர். இல்லறநெறியே இயற்கையோடியைந்தநெறி என்பதையும், மக்கள் வாழுதற்குரிய சிறந்த நெறி என்பதையும், திருவள்ளுவர் தமது தமிழ்மறையிலே சிறப்பாகக் குறிப்பிட்டுளர்.

"இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாந் தலை"

என்பது வள்ளுவர் வாக்கு. இத்தகைய சிறந்த இல்வாழ்க்கைக்குத் துணையாக இருப்பவள் மனைவியாவாள். இல்வாழ்க்கையின் சிறப்பு மனைவியின் மாண்பினையே பொறுத்தது. பெண்களின் பெருங்குணங்களுக்கு அடிப்படையாக விளங்கி அவற்றைப் பொலியச் செய்து பெண்களைத் தெய்வப்பிறவிகளாக ஆக்குவது கற்பெனும் பெருநலமே. "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பெனுந், திண்மை உண்டாகப்பெறின்" என்று, கற்புடைப் பெண்ணின் தனிச்சிறப்பைத் தமிழ்மறை முழக்குகிறது. கற்பினைப்பற்றிய வரைவிலக்கணங்கள் பலவுள. எனினும், அவற்றுள் ஒன்றேனும் கற்பின் திறனை, நன்கு புலப்படுத்துவதில்லை. பெண்களுடைய குணம், செயல், சொல் எல்லாவற்றிலும் கலந்து நின்றொளிரும் கற்பின் மாண்பை, எவ்வாறு வரையறுத்துக்கூறல் முடியும். நம் தமிழ்நாட்டுப் பெண்மணிகள் யாவரும் இக்கற்பினியல்பை, நன்கறிந்து ஒழுகினர். கற்புநெறி அவர்களுடைய உயிருடன் கலந்து

விளங்கியது. கற்பினை விடவரும்பொழுது உயிரினைக்கூட மதியாத பெருமை அவர்களுடைய பரம்பரைச் சொத்தாகும். தமிழ்நாட்டிற் கற்புடைமையிலே சிறந்தோங்கி மிளிர்ந்த மகளிர் பலர் உளர். அவர்களுடைய வரலாறுகள் தமிழ்நாட்டிலே வழங்கி வந்திருக்கின்றன. இந்தக் கற்புடை மகளிர்களுளெல்லாம் மிகச் சிறந்தவர் கண்ணகிதேவி ஆவார். இவருடைய கற்பின் பெருமையைச் சிலப்பதிகாரம் சிறப்பாகக் கூறுகிறது. கற்பின் தெய்வம் என மக்கள் யாவரும் தேவியாரைப் போற்றுகின்றார்கள். "கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ மல்லது, பொற்புடைத்தெய்வம் யாங்கண்டிலம்," என்று கண்ணகியைக் கவுந்தி அடிகள் புகழ்கிறார்; உயர்ந்தோர் யாவரும் போற்றும் உத்தம பத்தினித்தெய்வம் கண்ணகி என்பதைப் புலப்படுத்துவதற்கே இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை இயற்றினார்; நாட்டின் பல பகுதிகளிலுமுள்ள கண்ணகிகோவில்கள் தேவியார்தம் கற்பின் தெய்வத்தன்மையை நன்கு காட்டுகின்றன. கற்பரசியைத் தெய்வமாகப் போற்றும் தனிப்பெருமை இந்த உலகத்தில் நமது தமிழினத்துக்கே உரியது. இப்பெருமைக்குக் காரணமாயிருக்கும் வீரபத்தினியாகிய கண்ணகியாரின் கற்பின் பொற்பினைச் சிலப்பதிகார ஆசிரியர் எவ்வாறு காட்டுகிறார் என்று பார்ப்போம்.

கண்ணகி கதை யாவர்க்கும் தெரிந்ததொன்று. ஆதலின், அதனை இப்பொழுது விரித்துக் கூறவேண்டியதில்லை. கண்ணகியின் வாழ்விலே நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளையும், அவற்றிலிருந்து எவ்வாறு கண்ணகியின் தெய்வக்கற்பின் பொலிவு புலனாகிறதென்பதையும் மாத்திரமே ஆராய்வோம்.

கண்ணகி கோவலனை மணந்து, இல்லறம் நடத்திவந்தாள். வரும்நாளில் ஒருநாள் கோவலன் மாதவிஎனும் நாடகக் கணிகையின் ஆடல் பாடல் என்பனவற்றில் ஈடுபட்டுக் கண்ணகியைப் பிரிந்துசென்று அவளுடன் வாழ்ந்தான். தன் தந்தை தாயர் கொடுத்த செல்வத்தை மாத்திரமன்றிக் கண்ணகியின் ஆபரணங்களையும் அவளுக்குக் கொடுத்துத் தொலைத்துவிட்டான். கண்ணகி தனியே இருந்து வருந்தினாள். இல்லறத்தாருக்குரிய சிறந்த கடமையாகிய விருந்தோம்பலைக்கூட அவள் செய்யாது வாடிவதங்கினாள். ஆனாலும் தன் துன்பம் யாவற்றையும் பிறர் அறியாமல் மறைத்துவைத்தாள். அவன் விரும்பியபடி மறுக்காமல் தன் அணிகளையும் கொடுத்தாள். இவளுடைய இச்செயலுடன் சாதாரணப் பெண்களின் செயல்களை ஒப்பிட்டுப்பாருங்கள். இதுமட்டுமா! மாதவியைவிட்டுப் பிரிந்து தான் செய்த பிழையினை உணர்ந்து கோவலன் கண்ணகியை அடைந்தபொழுது, அவன் வாட்டத்தைக்கண்டு அவன் மாத

விக்குக் கொடுப்பதற்குப் பொருளின்றி வருந்துகின்றான் எனக் கருதி, புன்சிரிப்புடன்கூடிய முகத்தோடு, "சிலம்புள கொண்டு செல்லுங்கள்" என்றுங் கூறினாள். கற்பின் தெய்வம் அன்றி வேறு யார் இவ்வாறு கூறத்தக்கவர்?

கற்புடைய மகளிர் தம் கணவன்மாரையே தெய்வமாகக் கருதி வாழ்பவர்களாதலின், அவர்கள் தெய்வங்களை வணங்குவதில்லை. இந்த மரபு தமிழ்நாட்டிலே பல்லாயிரவருடமாக நிலைத்து வந்துளது. இத்தகைய பெண்களின் ஆற்றலை வள்ளுவர்,

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்றுகூறிப் பாராட்டினார். இந்தக் கூற்றுக்கு இலக்கியமாகக் கண்ணகி விளங்குகிறாள். கோவலனைப் பிரிந்துறையும் காலத்தில் அவள் தீக்கனா ஒன்றைக்கண்டாள். அதனைத் தன் தோழியாகிய தேவந்திக்குக் கூறினாள். அப்பொழுது தேவந்தி சூரிய சோமகுண்டங்களில் நீராடிக் காமவேளின் கோயிலைத் தொழுவோம் என்று வேண்டினாள். கண்ணகியோ கற்புடைய மகளிருக்கு அஃது இயல்பன்று என்றுகூறி மறுத்துவிட்டாள்.

கோவலன் தான் இழந்தபொருளை ஈட்டுதற்கு மதுரைக்குச் செல்ல எண்ணினான். கண்ணகியையும் உடன்கொண்டுசெல்ல விரும்பி "வா" என்று அழைத்தான். எதிர்வார்த்தையின்றித் தன்கணவனுடன் சென்றாள் அவள். செல்லும்பொழுது அவர்கள் கவுந்தியடிகள் எனும் தவமூதாட்டியாரையும் வழித்துணையாக அழைத்துச்சென்றார்கள். காட்டுவழியில் மூவரும் களைப்பாறி இருக்கும்பொழுது ஒரு தூர்த்தனும் பரத்தையும் கோவலனையுங் கண்ணகியையுங் கண்டு அவர்களை யாரென வினவக், கவுந்தியடிகள் தம் மக்கள் என்றார். அவ்விரு தீயோரும் ஒரு வயிற்றிற் பிறந்தோர் குடும்பமாகக் கூடிவாழ்தல் முறையோ எனத் தம் அறியாமையாற் கூறினர். இதைக்கேட்ட கவுந்தியடிகள் அவர்களை நரிகளாகச் சபித்தார். உடனே கண்ணகியும் கோவலனும் அம்மூடர்களுக்காகப் பரிந்துபேசிச் சாபநீக்கம்பெற அருள்புரிவித்தனர். இச்செயல் கண்ணகியின் இரக்கத்தையும், அறியாமையாற் பிழைசெய்தோருக்கு நன்மைசெய்யும் பண்பையும் காட்டுகிறது. கண்ணகி பிறர் நெஞ்சுபுகாத பெருங்கற்புடையவள் என்பதையும் தூர்த்தனுடைய செயல் காட்டுகிறது. எப்படியெனில், அழகு ஒழுகும் கண்ணகியினைக் கண்ட அந்தத் தூர்த்தன் அவள் அழகில் ஈடுபட்டு அவளைத் தன் நெஞ்சிலே பதிக்கவில்லை என்பதை அவன் வார்த்தைகள் காட்டுகின்றன. தூர்த்தனாயிருந்தும் கண்ணகியின் கற்பின் பெருமையினாலேயே அவன் கெட்ட எண்ணம் கொள்ளாதவனானான். பிறர் நெஞ்சு புகாத

பெருங்கற்புத் தமிழ்நாட்டிலேயுள்ள காவியங்களின் தலைவிகளுள் கண்ணகியிடத்தேதான் காணப்படுகிறது.

மதுரைக்குச் செல்லும்பொழுது கண்ணகியும் ஏனையோரும் ஐயைகோயில் ஒன்றிலே தங்கியிருந்தனர். அப்பொழுது தெய்வ முற்றசாலினி எனும் தேவராட்டியானவள் கண்ணகியின் பெருமாண்புகளையும் அவள் செய்யப்போகும் அருஞ்செயல்களையும் மிகச்சிறப்பாக எடுத்துரைத்தாள். அவளுடைய உரை, சொல் நயமும் பொருள் ஆழமும் நிறைந்தது.

"கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்றமிழ்ப் பாவை செய்தவக் கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய
திருமா மணி."

என்பது, சாலினி கூறிய பொருளுரை. அவளுடைய கூற்றுகள் யாவும் அப்படியே பலித்தன. உலகத்துக்கு ஒளி கொடுக்கும் ஒரு திருமாமணி, தமிழ் மகளிர்க்கு எல்லாம் பெருமையளிக்கும் தனித் தமிழ்ப் பாவை, தமிழினத்தின் தவக்கொழுந்து—என்றெல்லாம் போற்றப்படும் பெருமைக்குக் கண்ணகி உரியவளாகி விட்டாளன்றோ!

மதுரையை யடைந்த கண்ணகியும் கோவலனும் மாதரி என்னும் இடைச்சி வீட்டிலே தங்கினார்கள். கண்ணகி இளமை தொடக்கம் செல்வவாழ்வு வாழ்ந்தவள். வீட்டை விட்டு வெளியே நடந்து சென்று அறியாதவள். அவளுடைய வண்ணச்சீறடியை மண்மகள் அறியாள். இதனால் காவிரிப்பூம் பட்டினத்தைவிட்டு மதுரைக்குப் புறப்பட்டுக் கொஞ்சத் தூரஞ் சென்றவுடன் "மதுரை கிட்டிவிட்டதா" என்று கண்ணகி கேட்டாள். கோவலன் உண்மையைக் கூறி அவளை அஞ்சச் செய்யாது "ஆறைங்காதம்" என இரு பொருள்படக் கூறினான். இத்தகைய மெல்லியலாள் கல்லும் முள்ளும் நிறைந்த காட்டு வழியில் தன் கணவனுடன் செல்லும்பொழுது எவ்வளவு துன்பமடைந்திருப்பாள். ஆனால் தான் அடைந்த துன்பத்தைப்பற்றி அவள் சிறிதும் கருதவில்லை. தன் கணவனுடைய உடம்பு வெய்யிலில் மிகவாடிற்று என நடுங்கித் துயரமுற்றாள்; நாப்புலர வாடினாள்; தன் துயர்காணாது அவன் துயரையே கண்ட பேரன்புடையவளாக அவள் விளங்கினாள். கண்ணகியின் இப்பெருந்தன்மையினை அவளுடன் சென்ற கவுந்தியடிகள் மாதரிக்குக் கூறிக் கண்ணகியின் தனக்கென வாழாது தலைவனுக்கென வாழும் தகைமையை நாமும் காணச்செய்தார். மேலும் அவர் கண்ணகியின் பெருமையையும் கற்புடைப் பெண்டிரின் சிறப்பையும்,

"இன்றுணை மகளிர்க்கு இன்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு,"

என அழகாக மாதரிக்குச் சொன்னார். இந்த அடிகளில் வாழ்க்கைத் துணைவிகள் யாவருக்கும் கற்பு இன்றியமையாதது என்பதையும் கற்பரசியாகிய கண்ணகியைவிடச் சிறந்த தெய்வம் இல்லை என்பதையும் கவுந்தியடிகள் சிறப்பாக எடுத்துரைத்துளர்.

கோவலன் சிலம்புவிற்கச் செல்லும்பொழுது தன் பிழையையும் கண்ணகிக்கு ஏற்பட்ட துன்பங்களையும் நினைந்து நினைந்து வருந்தினன். காதலர் இருவரும் தம் உள்ளங்களிலிருந்த கருத்துக்களை வெளியிட்டார்கள். இதுதான் அவர்களின் கடைசிச் சந்திப்பு. ஆதலின் இளங்கோவடிகள் அவர்களை விரிவாகப் பேசச் செய்கிறார்.

"நாணமும் மடனும் நல்லோ ரேத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னொடு போந்தீங்கு என்துயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி."

என்று கண்ணகியைப் பாராட்டினன் கோவலன். தன் துயரை நீக்கிய நல்லாள் எனக் கண்ணகியை அவன் போற்றினமை கருதத் தக்கது. தான் தன் மனைவியுடன் ஊர்விட்டு வந்தது பிழை என்று கவல்கின்றான். 'நான் வாஎன நீயும் வந்தாயே' என்று கண்ணகியைக் கேட்கிறான். இதற்குக் கண்ணகி கூறிய மாற்றம் கற்பின் பொற்பினை நன்கு காட்டுகின்றது. "கற்பெனப் படுவது சொற்றிறம்பாமை" எனவும் "பெண்டிர்க்கு அழகு எதிர் பேசாதிருந்தல்" எனவும் நம் முன்னோர் கூறியுளர். இக்கூற்றுக்களை நினைவுபடுத்துகிறது கோவலன் "எழு" எனக் கண்ணகி எழுந்து அவனுடன் மதுரைக்குச் சென்ற பெருஞ் செயல். இம்மட்டுமா? கோவலன் தீய ஒழுக்கமுடையவனாய் இருந்த பொழுதிலும் அவனிடத்துத் தான்கொண்ட அன்பை ஒரு சிறிதும் மாற்றாதவளாய்க் கண்ணகி இருந்தாள் என்பதை, அவள் கூறிய "போற்றா ஒழுக்கம் புரிந்தீர் யாவதும் மாற்றா உள்ள வாழ்க்கையேன் ஆதலின் ஏற்றெழுந்தனன்" என்பது காட்டுகின்றது. இந்த மாறாத அன்புதான் - கண்டார் இகழ்வனவற்றைத் தன் கணவன் செய்திடினும் அவனை இகழாத பேரன்புதான் - கற்புடைப் பெண்டிரின் விசேட இயல்பு. இன்னும் தம் கணவர்கள்

செய்யும் பிழைகளைப் பொறுத்தலே சிறந்த நங்கையர் கடன் என்பதைக் கணவனையிழந்து வருந்தியபொழுது கண்ணகி கூறிய,

"பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டு கொல்
**கொண்ட கொழுநர் உறுகுறை தாங்குறூஉம்**
பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்"

என்னும் கூற்று காட்டுகிறது. கற்பின் தெய்வமாகிய கண்ணகி யின் வாயிலிருந்து பிறந்த இக்கூற்று, கற்புடைமகளிரின் இயல்பை நன்கு விளக்குகிறது என்று கூறவும் வேண்டுமோ? நிற்க.

கோவலனைச் சிலம்பு களவாடிய கள்வன் என்று அரசன் கொல்வித்தான். கண்ணகியின் கணவன் ஒரு கள்வன் என்ற பழிச்சொல் நகரெங்கும் பரந்தது. தன் கணவனைக் கள்வன் என்று சொன்ன வசைச்சொல் அவளுடைய உடல், உளம், உயிர் யாவற்றையும் சுட்டது. கோவலனுடைய புகழுக்கும் பெருமைக்கும் கேடு விளைத்தது. "தற்காத்துத் தற்கொண் டாற்பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்ற குறளிலே வள்ளுவர் நாயகனுடைய புகழைக்காத்தல் மனைவியின் கடன் என்று கட்டளை இட்டார். இக் கட்டளையை நிறைவேற்றினாள் கண்ணகி. ஆயமகளிர்கள் யாவருக்கும் முன்னே நின்று "சூரியனே என் கணவன் கள்வனோ" என்று கேட்டாள் "இல்லை" என்று மறுமொழி வந்தது. அது மாத்திரமன்றி அவனைக் கள்வன் என்ற ஊரை நெருப்பு அழிக்கும் என்று தண்டனையும் விதிக்கப்பட்டது. இவ்வள வுடன் அவள் அமைந்துவிடவில்லை. "கள்வன் என்று தீர்ப் பளித்தவன் அரசன் ஆகையால் அவனைக் கண்டு கேட்கிறேன்" என்று புறப்பட்டாள்; வழக்குரைத்தாள்; வென்றாள்; கோவலன் கள்வன்அல்லன் என்று நிலைநாட்டினாள். "பட் டாங்கில் யானுமோர் பத்தினியே யாமாகில், ஒட்டேன் அரசோ டொழிப்பேன் மதுரையும் என், பட்டிமையும் காண்குறுவாய்" என்று வஞ்சினம் கூறினாள். சூரியன் அக்கினி மதுரைமா தெய்வம் முதலிய கடவுளரை எல்லாம் தன் ஏவல்களைச் செய் யும்படி கட்டளையிட்டுத் தெய்வங்களையெல்லாம் கற்புடைப் பெண்டிரின் சொற்படி நடக்கும் என்பதைக் காட்டி வைத்தாள். தன் கணவனைத் தெய்வவடிவிற் கண்டு களித்து அவனுடன் விண்ணுலகடைந்தாள். இப்பெருஞ் செய்திகேட்டுச் சேரன் செங்குட்டுவனும் பிறஅரசரும் எடுத்த கோவில்களில் பத்தினித் தெய்வமாகக் காட்சி அளித்தாள் அன்று. கற்பின் தெய்வ மாகத் தமிழ்நாடு முழுதும் விளங்குகிறாள் இன்று. இக்கற்பின் தெய்வம் என்றென்றும் வாழ்வதாக.

---

சிவமுருகன் தமிழ்

# தமிழ் நெடுங்கணக்கு - பெயரும் எண்ணும்

[இராவ்சாகிப், சைவப்புலவர்
டாக்டர். தி. இரா. அண்ணுமலைப் பிள்ளை
L.C.P.S., L.M.S.S.A. Lond. (குற்ருலம், தென்காசி)]

(செந்தமிழ்ச்செல்வி—சிலம்பு உசு; பரல்-ச; ககூஉ-ம் பக்கத்தொடர்ச்சி.)

தமிழ் நெடுங் கணக்கைப் பற்றிய குறிப்புக்கள், 'பெயரும் எண்ணும்' என்னும் தலைப்பின் கீழ், பல எடுத்துக்காட்டுக் களுடன், ஒருவாறு சுட்டப்பட்டுள்ளன. இக் குறிப்புக்கள், எம்மால், முடிந்த முடிபாகக் கூறப்படவேயில்லை ; ஆயினும், இவை பெரும்புலவர்களது நுண்ணிய ஆராய்ச்சிக்குரியவை யென்பது எமது தேற்றம். இக் குறிப்புக்களின் திரண்ட பொருளை ஈண்டு தொகுத்துக்கூறுவது பயனுடைத்து.

பண்டைத் தமிழ்நூல்களில் பெரும்பகுதி பற்பல காரணங் களால் அழிந்துபோயின. தற்காலம் நிலவுகின்ற ஒரு சிலவற் றில், தொல்காப்பியமும் ஏனைச் சங்கநூல்களுமே மிகத் தொன் மையானவை. தொல்காப்பியத்தைக் கூர்ந்து கற்பவர்களுக்கு, அதில் பல புலவர்களது கருத்துக்கள் தொகுக்கப்பட்டுள்ளன வென்பது புலனுகும். 'என்ப,' 'என்மனுர் புலவர்', 'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே' என்னும் சொற்ருெடர்கள் காணப் படுவதினின்றும் இது நன்கு விளங்கும்.

தொல்காப்பியம், இற்றைக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்டதென்பது, யாவரும் ஒப்புக்கொள்ள வேண்டியதே. அதை எண்ணுயிரம் ஆண்டுகளுக்கு முந்திய தென்று கூறுவாறுமுளர்—(ப. 32—கருணுமிர்த சாகரம்— முதற் புத்தகம்—பேராசிரியர், மு. ஆபிரகாம் பண்டிதர்). தொல்காப்பியம் தோன்றுவதற்கு முன்னரேயே, தமிழ் இலக் கிய இலக்கணங்களிற் சிறந்த பல புலவர்கள் வாழ்ந்திருந்தது உண்மையாயின், அவர்களது காலம், இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட பன்னூற்ருண்டுகள் என்பது தெளிவு. அக்காலத்திலேயே தமிழ்மொழி சிறந்த பண்பாட்டுடன் நம் நாட்டில் வழக்கிலிருந்திருக்க வேண்டுமென்பது எளிதில் ஊகிக் கற்பாலது. வடமேற்கு இந்தியாவில், மறைந்த நகரங்கள் என்று கூறப்படும் மொகஞ்சதாரோ, ஃகரப்பா முதலிய இடங் களில், தோண்டியெடுக்கப்பட்ட பொருள்களிலிருந்து, அக்

காலத்து அங்கு வாழ்ந்துவந்த மக்கள் பல்கலை முதிர்ச்சி அறிவுடனும், உயர்ந்த நிலையில் அமைந்த கடவுட் கொள்கையுடனும் திகழ்ந்தவர்களென்றும் அம்மக்கள் திராவிடர் குழுவினைச் சேர்ந்தவர்களென்றும் பல ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அங்கு அகப்பட்ட சித்திர எழுத்துக்கள் பொறித்துள்ள முத்திரைகளையும் மற்றும் பொருள்களையும் ஆங்கிலப் (Sir John Marshall, Rev. H. Heras S. J.) பெரும்புலவர்கள் நடுவுநிலைமை தவறாது நிறைபுல மிகுந்த ஆராய்ச்சி செய்ததின்பயனாய், அங்கு நிலவிய சமயம் சைவசமயம் (Saivism) என்று மார்ஃசல் துரையவர்களும், அங்கு கண்டெடுத்த சித்திர எழுத்துக்கள் தமிழ் எழுத்துக்களுக்கு நெருங்கிய தொடர்புடையன என்று ஃஎராச் அடிகளும் தத்தம் கருத்துக்களை விரிந்த முறையில் வெளியிட்டுள்ளார்கள். புதைபொருள் கால ஆராய்ச்சியாளர், மொகஞ்சதாரோ நாகரிகம், இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகட்கு மேல் முந்தியதென்று கணித்துள்ளனர். இங்ஙனமாயின், 5000 ஆண்டுகளுக்கு முன்னரே, தமிழ்மொழி சிந்து ஆறு வட்டாரத்தினும் (The Indus River) வழங்கி வந்ததென்று தெளிவதற்கிடமுண்டு. மொகஞ்சதாரோவில் காணப்படும் சித்திர எழுத்துக்கள் இன்று நிலவும் வரிவடிவமாய் எப்பொழுது எங்ஙனம் மாற்றமடைந்தன? கடவுட் கொள்கையைப் போதிக்கவந்த (Rev. Pope, Rev. Caldwell, Rev. Heras) ஆங்கில உண்மை ஞானியார்கள் உதவியுள்ள தமிழைப்பற்றிய குறிப்புக்கள் இச் சிக்கலான வினாக்களுக்கு விடை காணுவதற்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டாவா?

நிறைமொழி மாந்தர்களே (முனிவர்), மறைமொழிகளை மந்திரமாகக் கூறியுள்ளார்கள் என்று தொல்காப்பியம் பகர்கின்றது. மன்னுதல் (=நிலைபெறுதல்—உறுதியாய் நிற்றல்), மனிதன், மந்திரம் என்னுஞ் சொற்களுக்கு மூலவேர், 'மன்' என்னும் சொல்லென்று புலவர்கள் கூறுகின்றனர். பண்டைச் சித்திர எழுத்து உருவங்களைக்கொண்டு, தற்கால எழுத்தின் வடிவங்கள் அமைக்கப்பட்டிருக்கக் கூடுமா? தமிழ்எழுத்துக்கள் ஓசையைக் குறிப்பதற்கெழுந்த குறியீடுகள் என்று பேராசிரியர்கள் கூறுகின்றனரே. தமிழ்எழுத்துக்கள் உயிர், ஆய்தம், மெய், உயிர்மெய் என்று வகுக்கப்பட்டதன் இயல்பு சிறந்த சமய உண்மைகளைக் காட்டுகின்றதல்லவா? அளக்க முடியாத பேராற்றல் உடைய இறைவன், உயிர்களை (ஆன்மா) த்தோற்றுவித்து, அவர்களது வினைக்குத்தக்க மெய் (உடல்) களை அளித்து, அவ்வுயிர்கள் உடம்படுத்து உயிர்மெய்களாய் உலகில் வாழ்ந்து, இறைவனது ஞானக்கண்-ஆயுதங் கொண்டு பாசங் களைந்து அருள்

பெற்று அவரது திருவடிப்பேற்றை அடைவர் என்னும் உலகப் பொதுச்சமயக் கருத்தை உறுதிப்படுத்துமுறையில் தமிழ் நெடுங்கணக்கு அமைந்துள்ளதல்லவா! தமிழ்மொழிபோன்று, இலத்தீன், சமக்கிருதம், ஆங்கிலேயம் முதலிய மொழிகளிலும் Vowels, Consonants, Semi-Vowels, etc. என்று வகுக்கப் பட்டுள்ளது நோக்கின் (Classification), இம்மொழிகளுக் குள், பண்டைக்காலங்களில் ஒரு தொடர்பு இருந்திருக்குமா?

பண்டைய முறைப்படி, நாட்டுப் பள்ளிக்கூடங்களில், சிறு மாணவர்களுக்குப் படிப்பு தொடங்கும்பொழுது, இன்றும் ஏட் டில் எழுதி, அரிச்சுவடி என்னும் பெயரிட்டு, 'அரி ஓம் நமசி வய' அல்லது 'அரி ஓம் நமோத்து சிந்தம்' என்னும் கடவுள் வாழ்த்தை முதலில் அமைப்பது தமிழ் எழுத்துக்களுக்கு தெய் வீகப்பொருள் உண்டென்பதைக் குறிப்பாய் உணர்த்துகின்ற தல்லவா? முப்பத்துமூன்று ஒலிகளுக்குக் குறியீடாக அமைந் துள்ள 33 எழுத்துக்களுள்ளும், வடிவத்திலேயே, உயிரெழுத் துக்களுள் ஒன்றுக்கொன்று, (அங்ஙனமே மெய்யெழுத்துக் களிலும்), சில ஒற்றுமை காணப்படுகிறதல்லவா? ஓங்காரம் என்னும் தனிமந்திரத்தின் உட்பொருள் அவ் வெழுத்தின் வடிவினின்றும் விளங்குகின்றதல்லவா? 'ஓம்' என்னும் அடி யாகப் பிறந்த ஓங்காரம், ஓம்பு, ஓம்படை, ஒத்துபோன்ற பல சொற்கள் தமிழ்மொழியிற் காணப்படுகின்றன அல்லவா? எண் களைக் குறிக்கும் தமிழ் எழுத்துக்களில், 'எ'(7) என்னும் எண், எகரத்தைப்போலவும், 'அ' (8) என்னும் எண் அகரத்தைப் போலவும் அமைந்துள்ளனவே? தமிழ்நாட்டில் 'முப்பத்து முக்கோடி தேவர்' என்னும் தூயசொல்லை வீடுவீடாய் வழங்கு கின்றார்களே! திருவள்ளுவதேவநாயனர் (1000 + 330) = 1330 குறட்பாக்களை அமைத்தனரே! முப்பத்துமூன்று என்னும் எண்ணின் தனிச்சிறப்பை, தொல்காப்பியம், பரிபாடல், திரு வாசகம், உபநிடதம், பகவத்கீதை, மகாபாரதம், தேவாரம், திருமந்திரம், கந்தபுராணம், திருவாய்மொழி, திருவிளையாடற் புராணம், சிவஞானசுவாமி, குமரகுருபர அடிகள், அருணகிரி நாதர் நூல்கள், விநாயக புராணம், *ஸ்ரீபராசரஸ்மிருதி, திருக் குற்றாலக் குறவஞ்சி, கதிர்காமமாலை முதலிய பல நூல்களிற் காண்கின்றோமல்லவா? நமது உடலில் உள்ள முள்ளந்தண்டு (வீணாத்தண்டு) வரிசையும் முப்பத்துமூன்று எலும்புகளா லாயது ஓர் அற்புதமல்லவா? இதே தமது வீணாத்தண்டைத் தானே, ததீசிமுனிவர் இந்திரனுக்கு ஒடித்துக்கொடுத்து, வச்சிராயுதமாய்ப் பயன்படுத்திக் கொள்ளும்படி ஆணை தந்தார்?

---

* ஸ்ரீ - Sri.

திருக்கோயில் கொடிமரத்தில் முப்பத்துமூன்று வளையங்கள் இருப்பதாக சமயநூல்கள் சாற்றுவதன் மறைபொருள் என்னை? பண்டைக்காலங்களில் எகிப்து முதலிய சில நாடுகளில் 33° பட்டம் மிகச் சிறந்ததென்று கூறுவதென்னை? உருத்திராக்க மணி, கழுத்தில் முப்பத்துமூன்று (நடுநாயகம் உள்பட) கொண்டணிவதும், உடலின் மற்றைய பாகங்களில் இருநூற்றுப் பதினாறும் (216) ஆக அக்கமணிகள் உடம்போடு ஒட்டி அணிய வேண்டியவை 249 (தமிழ் எழுத்துக்கள் மொத்தம் 249) என்று கூறுவதன் உட்பொருள் என்னை? உயிரெழுத்துக்களில் ஏழு நெட்டெழுத்துக்களும், ஏழிசையைக் குறிக்குமென்று செப்புவதென்னை? ஏழிசைக்கும் ஏழு கன்னிகை வணக்கத்துக்கும் (சத்த மாதர்கள்) நெருங்கிய தொடர்பு இருக்குமா? புதைபொருள் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் எவ்வாறு பயன்படும்?

இறுதியாக, தமிழ் இலக்கணங்களில் தலைசிறந்த தொல்காப்பியத்தில், தெய்வீகச் சார்புடைய சொற்கள் (கடவுள், பால்வரை தெய்வம், மாயோன், சேயோன், அந்தணர்மறை, ஓம்படை, பார்ப்பார், தொன்னெறி, வாள்ஒளி, இறை, திரு, வாய்மொழி, மும்முதற்பொருள், மறைமொழி கிளந்த மந்திரம், கரகம், முக்கோல்போன்றவை காணப்படுகின்றனவே? மேலும், 'தன்வினை, பிறவினை; தன்மை, முன்னிலை, படர்க்கை; வேற்றுமை (ஏழு), அல்வழி; உயர்திணை—அல்திணை; அகம்—புறம்; வினையெச்சம்—முற்றுவினை' முதலிய சொற்றொடர்களுக்கும் சமயத் தொடர்பான குறிப்புக்கள் உளவோ? முயற்சி திருவினை ஆக்குமல்லவா? ஆராய்ச்சிப்புலவர்கள் இத்தகைய துறைகளில் இறங்கி உழைத்து உண்மையை நிலைநாட்டுவார்களாக.

(தொடரும்)

# மறைந்த மணி

[திரு. தி. வே. நடேசன், அண்ணாமலைநகர்]

(சிலம்பு-உசு, பரல்-ந, பக்கம்-கஙசு-ன் தொடர்ச்சி)

என்றொரு வன்பாற் கன்றி யுரைப்பச்
சென்றவ் வுரையவள் செவியகந் தீய்ப்பக்
கைதை சூழ்ந்த கண்ணகன் பொழிலுள்
எய்தி யியற்றிய வமளி மிசையிருந்து
தேடிய செல்வ மிழந்தா ரொப்ப
வாடிய கனியின் கோடிய முகத்தொடு
மாவடுக் கண்ணியின் மயக்கங் கருதான்
கோவலன் மறுகும் வெறியின் உருகும்.
உலக உயிரெலாம் ஒருங்கணைந் தாலென
அலகில் அகன்ற நிலப்பரப் பெல்லாங்
கூடிப், பாடுங் கோடியர் அலையொடு
ஆடி மகிழ்ந்தும் ஆறெய் யிழுதென
நுண்ணுறு ஒண்மணற் பரப்பிற் குழுமி
மலர்ப்பந் தாடியும் பலப்பல வாடியும்
உலகறிந் தறியா உருமகிழ்வு மூழ்கி
ஓய்ந்தனரோடு நாந்தகக் கண்ணியும்
எய்ந்ததன் துணையொடுஞ் சேர்ந்தனள் அமளி.

## "வீழிதழ்காள்"

ஓவிய மெழுதிய உறையின் வாங்கி
மாவின் தளிர்க்கை வயந்த மாலை
ஏந்திய நல்யாழ் காந்தளில் ஏந்திக்
காலை யுற்ற களிப்பளி யாவுரை
மாலுற மனக்கண் மறையாது நிலவச்
சோலைப் புட்களுஞ் சோக மெய்தப்
பாலைப் பண்ணிற் பாட விசைக்கும் :

முற்றும் புரையூர்ந்த மூடருல கடையாதோ
நிற்க அதற்குத் தகவென்றோன் நீளுணர்வை
நிற்க அதற்குத் தகவென்ப துள்ளுணர்ந்தாற்
கொற்றவேற் கொல்லுலையில் கோடிசெயும் அரசெதற்கோ ?

புயல்போற் கனலுளம் புந்தி வருத்த
மயலின் சோர்ந்து மையுறழ் கண்ணியின்
அருள்பார்த் திருந்தோன் ஆங்கவ ளிசைத்த
பொருளிசை தேறிப் பொங்குசின மடக்கிப்
பொருந்தா நிலைகண் டருந்தாள் நீவி
விருந்தாம் உரைபல வீழ்வன மிழற்றிப்
பெற்றனன் அரிதின் முற்று முறுவல்
வெற்றியின் மருங்கியாழ் பெற்றிசை முழக்கும் :

**கோவலன்:** பொன்னரங்க மீதே மின்னின் துள்ளலென்ன
இன்னட மியற்றுங்கன் னத்திருவின் வாட்கண்
என்னினைந்து சோரும் ஏனோ சோதிமாழ்கும்
தன்னினையான் உள்ளந் தாழ்ந்து வந்ததாலோ ?

**மாதவி:** பூந்தா துதிர்ந்து பொன்னாடை போர்க்குங் கானற் கழிவழியே
பூந்தா சலையப் பொன்னினவிர் மேனிபொலியச் சென்றாரை
சாந்து தழுவுந் திருமார்பைச் சேர்ந்தே யொழுக விழைவுற்றாள்
ஈந்து செல்வீ ரெம்முயிரை என்றே யிரந்து வேண்டுவதோ ?

அல்லி மொய்க்குங் கழிகானல் அணைந்துமணக்குஞ் சிறுகாற்றில்
மெல்லென் பார்வை மேய்ந்துசெல ஒல்லென் கழலின் ஒலி [போக்கிப்
புல்லு முந்தன் அடிதழுவப் போக மீந்து செல்வீரே
சொல்லு மற்றுச் சோர்வுற்றாள் ஒல்லை வாரீர் என்பதுவோ ?

**கோவலன்:** நிலவுங் கதிரும் நெருங்கிக்கதிர் எறியுமென
அலையுங் கடலின் அவலத்தோ டிசைந்துலகம்
மலரத் தமிழ்நிலத்திற் கலகலக்கும் புள்ளினத்தின்
ஒலியுமதன் இணைவிழியென் உளத்தலைக்கும் ஓரணங்கோ ?

**மாதவி:** நிலவுத் தோன்றா நெடுநல் இரவில்
உலவுங் காற்றில் ஊதின் குழலின்
ஒலியோர்ந் திருளின் ஊடே தேட
நலியு முள்ளம் நல்கேன் வரினே.

**கோவலன்:** புன்னை யடிக்கீழ்ப் பொதிமணி யிருளில்
மின்னல் வரவை யுன்னிப் பொருந்திக்
கன்னேர் சிலையாய்க் காத்த லுழந்துங்
கன்னேர் நெஞ்சள் காவாள் அருளே.

**மாதவி:** நிலவணங்குன் பொன்னடியில் நிறைமுத்தம்
இட்டிட்டுக் காதல் பொங்க
அலைக்கையாற் பரவுதலின் தழுவுதலின்
அயராத கடலே வாழி !
உலையுமியற் பொருள்வீழ்ந்து குலைந்தழியும்
என்னுயிரை யுள்ளா துற்றார்
குலவுதிரை மீதூர்ந்து நின் துணையால்
வருவாரேற் கூறாய்! கூறாய் !

நிலைதவறும் நீளுலகின் அலையுமுயிர்க்
குழுக்கெல்லாங் காத லென்னும்
நிலையுமியல் அன்பினொளி காட்டிகரை
சேர்க்குமொரு விளக்கம் போல
அலைகடலின் முடிவெங்குங் கண்ணோச்சிக்
கலங்கூவுங் கரைவி ளக்கே
அலையூர்ந்தென் னுயிர்கொண்டு அணைவாரோ
அருள்கூர்ந்து பாராய் ! பாராய் !

திரையுறையுந் தண்மையொடு கரையுலவு
முயிர்க்காற்றே இன்னா ளெல்லாம்
உறைவதியாம் இங்கன்றோ உண்டதுமுன்
உணவன்றோ ஒருசொல் சொல்லாய்

திரைதந்த வெண்சிப்பித் தலையென்மேல்
வைத்துமகிழ் நட்ஞ்செய் தார்தாந்
திரைமோத வருவாரோ அறிவாயே
எரிதுயரந் தேய மாய.

**கோவலன்:** ஏர்முனையாற் சீர்பெருக்கிப் பார்காக்கும்
பதமுயர்ந்த உழவர் தங்கள்
கூர்உறையுங் கண்ணீரைத் தண்ணீரால்
துடைத்தளிக்குங் காசே வாழி!
போர்அறியாப் பொழிலெம்மூர்ப் போவாயேல்
உயர்மனைமேற் புன்கண் கூரக்
கார்ப்பருவ வரவெண்ணுங் கண்ணுழந்த
ஒருவட்கென் வரவைக் கூறாய்.

**மாதவி:** செற்று அரிக்குஞ் சில்லென்னுந் துயர்பனியை
முற்ற விலக்க முதல்வழியொன் றறியாது
கற்றுத் தெளிந்தோருங் கவல்தாங்குங் கல்லாவர்
பற்றுக காதலெனப் பண்முழக்காய் சீர்யாழே.

**கோவலன்:** உலகம் பலவும் பரந்துறையும் பெருங்காதல்
அலகிலுன் நெஞ்சில் அடைந்தாலே வாழ்வென்பார்
அலகிலுன் நெஞ்சில் அடைந்தாலும் தீமையெலாம்
விலகி நலியச் செயுஞ்சிறுமை யதற்கேனோ?

கலையே உலகைக் கரையேற்ற வல்லதென
உலவா தொலிக்கும் உன்சிலம்பு ஒல்லென்று
உலவா தொலிக்கும் உன்சிலம்பை அக்கலைதான்
தலைதாங்கிப் போற்றுந் தகைமைதான் என்னேயோ?

இசையே வறங்கூர் இருள்நெஞ்சம் ஓம்புமென
இசையின் இசையே இசைப்பார்கள் திசையெங்கும
இசையின் இசையே இசைப்பார்கள் அவ்விசைதன்
இசைபெருக நசையோடுன் ஏவல்செய அறியாரோ?

**மாதவி:** உலகம் பலவென் றுரைப்பார்
கலக நெஞ்சர் கண்டாய்
உலக மொன்றே காதல்
இலகு நெஞ்சென் றுரையே.

அறிவுப் பகையே போபோ
உரிமைத் துணைவி கற்பின்
எரியை யோம்பு நீராள்
தெரியக் காட்டுந் திறனே.

கள்ளம் பலவே செய்தாய்
கள்ளி யென்றே யொருநாள்
சொல்லி யிகழ்ந் தவரே
சொரிவா ரடியில் மலரே.

கடவுள் என்பாய் போ போ,
மடவோள் ஓம்புங் கற்பைக்
கடந்து தொழுவார் துணைவர்
இடையில் உன்னைத் தொழுவோ?

அழலார் நுண்கண் அரவொன்று தலைவிரியக்
குழலோ னிசைக்கக் குழைந்துநின் ருடுகையில்
அவலங் கலவ அவனையுடன் நீண்டுமென
அவலம் மேவா மாதவியின் யாழிசையில்
அறிவயர் வுற்ற கோவலன்தன் அறத்துணைவி
எரிநிறை யோம்பும் இயல்பினள் எனும்பாடல்
இருட்செவியுற்று விரிகதிர்மின் பொறியன்ன
மருள்தொகை நீக்கிப் பொருக்கென் றெளிநிரப்பத்
தெருண்டெழு முணர்வோர் தீயுமிழும் மாதவிமேல் :
வெள்ள நெஞ்சிற் றனக்காய்க்
கொள்ளு நசையே கள்ளம்
கள்ளம் பல வென் றறைவார்க்(கு)
எள்ளி யுண்மை யுரையே என
மீதுற் றெழுந்த மூதுரை கூறி
கோதில் மாதவி கொல்லிருள் கிடக்கக்
காதல் கழன்ற நெஞ்சினன்
கானல் நீங்கக் கதிரொளி மறையும்.

* * *

வயலுழைத் தண்பைந் தாளினி தாடி
வளநகர் மேவிய இளங்கால் தூதன்
அந்தியம் பொழுதில் அன்புளம் மீதுற
வந்தின் வண்பால் வழங்கனை நோக்கிக்
கொட்டிலி லடங்காப் பட்டுடற் கன்றுகள்
முட்டியும் மோதியும் எட்டித் தாவியும்
பாதை நோக்கியும் வீதி யுலாவியும்
அடங்கா நெஞ்சமொடு அகவு முரசார்த்து
கவின்பெரு விழவிற்குக் கால்கோ ளொடுக்கும்
நாழிகை யுற்றது நவையிற் காதலிர்
அறிமின் என்ன அணிநக ரெங்கும்
அறையுந் திருப்பணி குறையற முடிக்கக்
கட்டிலின் பெற்றிமை நோக்கியுங் காதலன்
விட்டகன் றதனல் வெரூஉத்தரு தனிமை
உற்றது நோக்கியும் வெற்றுளந் துயருற
யாழ்கை யெடுத்துப் பாணிசை கூட்டும்
அகநிலை மருதமும் புறநிலை மருதமும்
அருகியன் மருதமும் பெருகியன் மருதமும்
முறையிற் பாடி மூள்துயர் பெருக
எண்ணங் கலங்கி யாழ்அயல் நீத்து
இருமை போக்கி இருள்நிலை மாற்றி
ஒருநிலை கூட்டும் ஒருபெருங் காதலின்
திருமுகம் போக்கக் கருதின ளாகி
"வெள்ள நெஞ்சிற் றனக்கே யாகக்
கொள்ளு நசையே கள்ள மென்று
சொல்லிய வுரையின் மறைப்பொருள் தேறேன்
கோடிய மதியன் குறும்பியற் சிறுவன்
வெள்ளி வெண்ணிலவோன் சுள்ளென வெறிக்க
உள்ள மோரா ஒள்ளரி நெடுங்கண்
கொள்ளை யன்பினோர் கொல்லுரை கூறி

வெள்ளம் முரணிய வெந்துயர் பெருக்க
மாலை யென்னுங் காலை காணுன்
முல்லை பரப்பிய பொல்லா மணத்தொடு
கோன்பின் ஞெழிய ஆன்முன் துற்று
மதைஇய உள்ளமொடு மதலை கூவுங்
குரலொடுந் தங்கிக் கோறல் செய்வான்
வீழ்துணை நீங்கிய வேய்த்தோள் நங்கையர்க்(கு)
யாழும் பண்திறம் திறம்பும் என்பது
அறிந்தருள்வீர் என் அகனமர்ந் தீரென''
செம்மனத் தெழுஞ்சொல் செவ்வாய் மிழற்ற
முத்தெயி றேவ முழுமுகைப் பித்திகை
இலவிதழ்ப் பணிகொள் அலத்தகந் தோய்ந்து
செந்நிற முத்தம் வெண்தூத் துகின்மேல்
சிந்திய காட்சியின் செழுந்தா ழைக்கண்
எழிசை யாற்றலுஞ் சூழவுடன் போக
வேழமுந் தேனும் வாழை நடுவென
வயங்கு மெய்க்குழவியின் வளரிள மொழியுங்
கூடிய இன்பயன் நாடியுடன் செலக்
கந்தழி காமத் துந்துரை யெழுத
தூமலர் பல்வகைத் தொடையல் சேர்த்திக்
காமர் கண்ணி காமத் துணைவி
வயந்த மாலையை வருகெனக் கூவி
நயத்திற் கிளத்திநல் லுரைகொடு வருகெனப்
பாண்அளி சூழ்தரும் பயங்கெழு மாலை
வாணகை யாட்டியின் வயத்திற் சேர்க்கப்
பல்வகை விளக்கமும் மல்கொளிக் கடலில்
பொருட்குவை பொங்கும் அலையென நிலவ
அருளற மாந்தர் கயலென உலவக்
கொடுப்பவும் எடுப்பவும் விடுப்பவும் அடுப்பவும்
நீங்கா வாகிய நீள்பெரு மறுகிடைக்
கோவலற் கண்டு கொடுந்துயர் கூறி
மாதவி போக்கிய மாலைகைக் கொடுக்க
மாலை கோள் மறுத்துக் கோவலன் கூறும் :
வேறுயிர் தன்னல் வீங்குதுய ரெய்தப்
பாரா நெஞ்சமொடு பருமகிழ் துய்த்தனள்
தன்குலத் தூறிய புன்குண நீங்கிலள்
விலைமக ளேயென வெவ்வுரை பெற்றுத்
தலைவி நெஞ்சம் உலையாது கூறி
மாலை வாரா ராயினும் மாணிழாய்!
காலை வருவரெனத் தேற்றங் கூற
எண்ணங் கிளர்ந்தலோ இதயம் போழ்ந்தது
எண்ணம் பொன்றுவ தியாண்டோ வென்று
பேரொளி யடங்கிய நீர்வார் கண்ணளாய்
மணிகிளர் அமளிமிசை மாத்துயர் வீழ்த்த
மணிக்கண் துயிலாது மாய்வனள் கிடக்கும்.

## "வாழ்வறமே"

நூறாயிர முறை யெண்ணியுந் தீராச்
சீரார் வாழ்வின் ஒருநா ளெண்ணியுங்
காதலன் கேடுறக் கற்புத்தீயால்
காவலன் மாநகர் கனையெரி யூட்டிய
கற்புக்கிறைவியைக் கருத்தில் வணங்கியும்
அன்னாட்குற்ற அருமகளிவளென
மருங்கமர்ந் திருந்ததன் மணிமேகலையினை
உய்வழி செலுத்தும் ஒருவழி யுன்னியும்
பற்பல வெண்ணியும் பஞ்சையுற் றிருந்த
நெஞ்சம் நிமிர்தர நெருங்கிய தோர்ஒலி
முற்றிலும் இருள்வாய் உற்றழி மக்காள்
பற்றெலா நீங்கிப் பணிசெய் வாரீர்
என்னும் பொன்னுரை முன்மொழிந் தன்பெனும்
ஒண்கதிர் போக்கி உலகிற் கருளிய
புத்த பகவன் பொருட்பெயர் கூறி
உத்தமர் கூட்டம் பெயர்வது கண்டு
கட்டற்றுள்ளங் கடவ வோடி
மருள்திறம் மாய்த்து அருள்திறங் காட்டும்
அறவண அடிகள் அடிமிசை வீழ்ந்து
அடிகாள் நுந்தம் அடியிணை துணையென
அழுவனள் மொழிந்த அன்புரை கேட்டு
வழுவா நெறியின் வழித்திறங் கண்டோன்
புத்தனின் கோயிற் போகுதும் வாவென
ஆணைமனங் கொண்டவ ணடிதொ டர்ந்தனள்
ஆலயம் புக்கு நூலறி தூயோன்
நங்காய் நந்தமை நாடிய தென்னென,
"அறவோரின் அன்பமரும் அகல்நெஞ்சம் ஒவ்வொன்றும்
மறமோங்கி யரசோச்ச மாணொளியின் வெளிகாணா
நறுமலர் நெஞ்சிதழ் குவிய நாற்றமெலாந் தோற்குமதன்
இருளடிமை அறநீக்க முருகலர்த்துங் கதிரன்றோ?"
என மொழிந் தாள்தன் மனநிலை யாய்ந்து,
மாதராய் உயிர்மேற் காத லூற்றெழ
முன்னாள் தலைவன் சொன்னவை கேளாய்
"இறைவன் நாடி எண்ணம் அலையேல்
ஆழம் அறியொணாச் சூழ்பே ராழி
அறிவுக் குறுங்கயிற் றளப்பதும் அவமே
யாதும் வினவேல் வினாவிற் கேவிடை
ஓதுவா ரெலாம் பேதையர் கண்டாய்
குருதி பெருக்கியும் மறைபல வோதியும்
இறையோர்ப் பேணலிற் பெறுபயன் இலையால்,
தன்னுள் விடுதலைத் தான்நா டாதான்
வன்சிறை தன்னைச் சூழக் கொளுமே
காணும் இயற்கைக் காட்சிபல வாக்கி
நாள் மலருக்கு நறுமண மூட்டி
ஒண்மயில் விரிக்கும் மணிச்சிற கதிலும்
கண்ணை யீர்க்கும் காட்சிய தாகி

விண்ணகம் படரும் பன்னிறக் காரினும்
தண்ணெழில் கூட்டித் தாணு யெங்கும்
ஆக்கியும் அழித்தும் போக்கியுங் காத்தும்
நீக்கமற் றுறையும் ஆற்றலொன் றுண்டால்
ஒழுங்கிற் செலுத்துமவ் வொழுக்கத் திற்கோ
அன்பே அகமதன் குறிக்கோள் அமைதி
காரண காரியத் தொடர்பிவ் வுலகால்
காரணம் வேரறக் களைந்தெறிந் தாற்பின்
காரியம் வீதல் நேரி தலவோ ?
பற்றே வினைபல பற்றிக் கொணர்ந்து
சுற்றிப் பிறப்பெனும் பெருங்கட லிட்டுச்
சுற்றி யலைக்குந் துன்பச் சுழலில்
வான்மீன் குழுவெனத் தானே யாக்கிய
வினையின் விளைவே இன்புந் துன்பும்.
வினைவீழ்ச் சிக்கோர் சூழ்ச்சி நாடி
முற்றறி வுற்றோர் பற்றற வொழித்து
நற்றவம் பூண்டு நடுக்கி லின்பப்
பெரும் பேறெய்துவர்; மருங்குறை வோரால்
பெறுகுறைக் கெல்லாம் அருள் மாறீந்து
தூய்மையும் நேர்மையும் வாய்மையும் பொறையும்
பூண்டே யொழுகின் ஈண்டும் வினையெதோ ?
தீயன மாய்ந்த தெளிநிலை வாழ்வில்
எயின நலனெலாம ஈண்டிக் கனியத்
தூநிலை பெற்றோன் துகள்பல மலியிம்
மண்ணக வாழ்வினை நண்ணுவானல்லன்
இருவகைப் பற்றும் ஒருங்கலைத் தாலும்
இழுக்கா நிலையின் ஒழுக்கம் பழுத்தோன்
எக்கமுங் களிப்புந் தாக்கா அவன்பெறு
எல்லையில் அமைதி; இறவான்; பிறவான்
பெரும்பே றெய்தினன் ஒருபணிச் சிறுதுளி
ஒளிக்கடல் கலந்தது உண்மை யீதே
ஐவகைச் சீலத்து அமைதி யிதுகேள்
கள்ளுங் கொலையும் பல்விருள் கூட்டும்
பொய்யுங் களவுடன் மெய்யுணர் வற்ற
கர்மமுங் கடிந்தனர் தோமறு தூயோர்
நால்வகை வாய்மை நவிலுவன் கேளாய்
துன்பில் பிறந்து துன்பில் வளர்ந்து
துன்பில் வாழ்ந்து பிணிமூப் பணையத்
துன்பில் தளர்ந்து தோற்றம் மாய்வுறும்
மன்பதை யுலகந் துன்பத் துதைவே
காதல் இன்பெனத் தோன்றினுங் கருங்குடில்
சாதல் நாளில் தீக்கது வும்மே
வீரச் செயலின் விளங்கியோ னுடலையும்
மாறுற் றுண்ணும் வேறுபல் புள்ளினம்
உலகம் அழகிதே யாயினுங் கலகம்
மலியப் பிறரெலாம் மடியவே சூழ்வார்
துயருறு வோரையுந் தொடித்தலை விழுத்தண்(டு)
ஊன்றி நடக்கும் ஆன்றோர் பலரையும்

அண்மிச் சான்றீர் மண்ணக வாழ்வினை
விரும்புதிரோவென வினவினாலிவ்
வுலகொளி படவும் அழுகுரலெழுப்புங்
குழவியின் அறிவோர் குவலயத் திலரென
அழுங்கிய நெஞ்சமொ டுறைவர் ஆதலின்
துன்பத் தீதுற ஏதுவொன் றறிதி
எவ்வகைத் துன்பும் எய்துவது நசையால்
நசையின் இயக்கில் நலியுறு மாக்கள்
இசைநில வாத இருள்கூர் நெஞ்சமொடு
பிறர்பொருள் விரும்பியும் பிறர்கே டுன்னியும்
போரும் பிணக்கும் பூசலும் மலிவித்(து)
ஓரார் வாழ்வின் ஒருபெருங் கருத்தினை
துன்பம் ஒழிவுற வழியொன் றுரைப்பல்
தன்னலப் பற்றும் மன்னுல கின்மேல்
தொற்றுறு காதலும் முற்றக் கழித்து
இனியவை பேசி இழுக்கில் நாட்பல
தொண்டே யாற்றித் தொல்லறி வோரின்
வாழ்ந்து வரினே வீழ்ந்தது துயர்காண்
இறுதி வாய்மையாம் உறுதி யொன் றறிதி
மெய்விருப் புற்றோர் உய்யும் ஒருவழி
ஏமமும் அமைதியும் எய்தும் பெருவழி :
இன்பப் பெருமுடி எங்கோ வுயர்ந்தி
இருக்கும் ஒருபெரும் பொருப்பின் மீதுற
எண்வகைப் படியின் உண்மை தேறாய்
முதற்படி நல்லன வழிப்படன் மொழிவன்
அறநெறிக் கஞ்சி உறுபிழை நாணி
புலனறி வலைத்துப் பலவினை கூட்டுங்
கருமத் தின்கண் கருத்தொழி யாது
நன்மனங்கொண்டு மன்பதைக் கெல்லாம்
இன்னருள் காட்டி இன்னா வியல்பொடு
ஆசையுஞ் சீற்றமும் அழியுமா றொழுகி
அமைதியு மன்பும் அழகுங் கெழுமிய
விழுமுநல் வாய்மை விருப்புற வுரைத்து
ஒண்பளிங் காரம் பொன்ஞாண் காட்டுமென
நல்லன வாற்றி எல்லையில் அன்பே
வெளிப்பட வாழ்ந்து வெற்றிடங் கொண்ட
இருள்வான் அணிசெய் திலங்குமீன் கணமென
அருள்வடி வாகிய அறவோர் அணுகி
கண்ணிலி கொண்ட கைக்கோ லென்ன
உண்மை தேர்ந்து ஒழுகுநல் வாழ்வில்
உறுமிடர் கடிய பெருமுயல் வாற்றி
வழிப்படர் வோரே விழிபெற் றோர்காண்," என
இன்னும் பற்பல உண்மை புகலத்
துன்றிய வுணர்வொடுந் தொழுதனள் கேட்டு
மும்மணி வணங்கினள் மொய்குழன் மாதவி
பொய்தீர் அறிவன் பெருவழி பற்றினள்
ஒண்மல ருற்ற ஒருபனிச் சிறுதுளி
ஒளிக்கடல் கலந்து உய்திகொண் டதுவால்,

# தமிழ் ஐ. ஔ. எழுத்துக்கள்

[திரு. கா. அப்பாத்துரை, எம். ஏ., எல். டி.]

'தமிழ் எழுத்துக்களில் ஐ. ஔ, தமிழுக்கே தொன்முதல் உரிமையுடையனவா, அல்லவா?' என்ற ஐயம் பலருக்கு ஏற்பட்டுள்ளது. காரணங்கள் கீழ்தரப்பட்டுள்ளன:

(க) 'ஔ' தமிழில் தனித்து உயிராகவும், உயிர்மெய்யாககவும் மிக அருகலாகவே வழங்குகிறது. இடையிலும், கடையிலும் அது வருவதில்லை. ஔ சொல்லின் முதலில் அவ், அவு எனவும் எழுதப்பெறுகின்றன, ஒலிக்கப்பெறுகின்றன. வகர மடுத்தன்றி அது வருவதும் இல்லை. (எ-டு. ஔவை - அவ்வை, மௌவி - மவுவி). (உ) 'ஐ' என்ற எழுத்தும், அய், அயி, என எழுதப்படவும், ஒலிக்கப்படவும் செய்வதுண்டு. அதாவது யகரத்தின்முன் தனிக்குறிலின்பின் அய் எனவும் மற்ற இடத்தில் அயிஎனவும் வருகிறது. தவிரத் தனிக்குறிலில்லாத விடத்தில் யகர அகர உயிர் மெய்யின் முன் அது அகரமாகவே ஒலிக்கப்பெறுகிறது. சில சமயம் அங்ஙனம் எழுதவும் பெறுகிறது. (எ-டு. ஐயை - அய்யை, மையல் - மயல், பழைய - பழய). (௩) தனி எழுத்தாகவும் ஓரெழுத்தொரு மொழியாகவும் வரும்போதன்றி இவை நெடிலல்ல; நெடிற்குறுக்கம் அல்லது குறில் என இலக்கணப் புலவரால் வகுக்கப்பட்டுள்ளன.

எனவே, வடமொழி எழுத்துமுறை பின்பற்றி ஐ, ஔ தமிழ் நெடுங்கணக்கில் சேர்க்கப்பட்டிருக்கலாமோ என்று சில வடமொழி உயர்வுப்பற்றுளரும், இன்று பல தமிழ்ப்பற்றுளரும் எண்ணுகின்றனர். அகர இகரம் ஐகாரமாகும், அகர உகரம் ஔகாரமாகும் என்ற தொல்காப்பிய நூற்பாக்கள் இதற்கு ஆதாரமாகக் காட்டப்படுகின்றன.

## எதிர் தரப்பு விளக்கமும் விடையும்

1. தமிழ் நெடுங்கணக்கு வடமொழியையோ, ஆரியத்தையோ பின்பற்றியதன்று. உலகில் ஆரிய மொழிகள் எதற்கும் நெடுங்கணக்குமுறையோ, எழுத்துவடிவோ எங்கும் இருந்ததில்லை. உலகுக்கு வரிவடிவுதந்த நாட்டினங்கள் எகிப்திய, சால்டிய, இந்திய (திராவிட அல்லது தமிழ்) சீன இனங்களே. இவற்றுள்ளும் இன்றைய இந்திய மொழிகள் அனைத்துக்கும் அடிப்படையான நெடுங்கணக்கு வரிசைமரபு இந்தியாவுக்கு மட்டுமே தனிச்சிறப்புடையதாதலாலும், பிறநாட்டு நெடுங்கணக்கு வரிசையில் இன்றளவும் இத்தகு வரிசைமுறை காணப்படாததாலும், ஆரியர் வருமுன்பே இந்தியாவில் எழுத்துமுறை

...ம், இன்றைய தமிழ் நெடுங்கணக்கு வரிசையும் ...யமொழிகளனைத்தின் நெடுங்கணக்கு வரிசையும் ...வடத்துக்கு) தமிழ்ப் பேரினத்துக்கு உரியதேயாகும்.

(2) ஐ. (அ+இ;) ஔ (அ+உ) இரண்டும் தனி உயிர்கள் அல்ல. இணை உயிர்கள் என்று இலக்கணப் புலவர் எடுத்துக் காட்டியுள்ளார். இன்று ஆங்கில முதலிய மொழிகள் பலவற்றுள்ளும் இவ் இணைஉயிர்கள் உண்டு. வேறு இணை உயிர்கள் பல இக்கால மொழியிலும் பண்டை ஆரிய மொர்ழிகளிலும் உண்டு. உ ஆ இ (oi) தற்கால ஆங்கிலம், பிரஞ்சு, ஜெர்மன் மொழிகளில் உண்டு. ஆயினும் இவை புதிய ஒலிகள். பண்டை ஆரியத்திலும் அதன் வழி கிரேக்கமொழி, லிதுவேனிய மொழிகளிலும் (ai, āi oi, ōi, ei, ēi, au, āu, ou, ōu, eu, ēu, என்ற) 12 இணை உயிர் ஒலிகள் உண்டு. ஆனால், இன்றைய உலகில் பழைய ஆரிய இணை உயிர்களில் மீந்திருப்பவை ஐ, ஔ இரண்டு மட்டுமே. வடமொழியில் இவைகூட மீந்திராமல் மாறிவிட்டன. இன்றைய வடமொழி ஐ, ஔ, ஆரிய ஐ, ஔ அல்ல. ஆரிய ஆய், ஆவ் என்பவற்றின் குறுக்கமே. வட இந்தியரால் இன்றும் ஐ, ஔ இரண்டும் இ ஆ, (x:), உ ஆ (ɔ:) என்றுமே ஒலிக்கப் பெறுகின்றன. ஐ, ஔ என்ற பிறமொழி ஒலிகளை, அவர்கள் ஆஇ, ஆஉ என்றே குறிக்கின்றனர். (எ. டு. ஆங்கிலம் Pie; தமிழ் பை, இந்தி எழுத்தில் பாஈ) இதனால் ஏற்படுவது யாதெனில் ஐ, ஔ பண்டைய ஆரிய மொழியில் இருப்பினும் அவற்றின் ஒலிப்பு தமிழ் ஐ, ஔ அல்ல; இந்தியாவுக்கு வந்த பின்னும், பிறநாட்டில் ஆரியரல்லாதவருடன் கலந்தபின்னும் ஆரிய மொழிகளின் 12 இணை உயிர் எழுத்துக்களுள் ஆரியரல்லாத இனத்தார்க்குப் பழக்கமான ஐ, ஔ மட்டுமே நிலை பெற்றும் புதிதாக உருப்பெற்றும் நின்றன. மீதி அழிந்தன. ஆகவே இந்தியாவில் ஐ, ஔ வடமொழியிலிருந்தோ ஆரியத்திலிருந்தோ தமிழுக்கு வரவில்லை. தமிழிலிருந்தே ஆரியத்திற் புகுந்தன என்று காண்டல் எளிதாகும்.

(3) தமிழில் ஔ அருகலாக வருவதனால் அது தமிழ் எழுத்தல்லவென்பது ஙா, ஙெ தமிழில் வாராததால் அது பிற மொழிக்குரியவை என்பது போன்றதே. தமிழில் அது வகரத் தோடுதான் வருகின்றதெனில் (அ) ஆங்கிலத்தில் 'க்யூ' (Q) எப்போதும் 'யூ' (U) உடன்தான் வருகிறது; தமிழில் (ஆ) நகரம் தகரத்துடன் மட்டுமேவருகிறது என்று காட்டலாம். பௌவம், கௌவை, கௌவு, வௌவுதல், வௌவால் முதலிய தனித் தமிழ்ச்சொற்களில் அது இடம் பெறுகிறது.

(4) ஐ, ஔ இணையுயிராதலால் அஇ, அஉ என ஒலிக்கப் படலும் அயி, அவு என உடம்படு மெய்புணர்ந்துவரலும் இயல்பே. அவை மொழிக்கு இன்றியமையாததல்லவாயிருப் பதும் அதனாலேயே. எல்லாமொழிகளிலும் அவற்றின்நிலை இதுவே. எல்லா மொழிகளையும் போலவே தமிழிலும் பிற திரா விடமொழிகளிலும் அது மற்ற உயிர்கள், மெய்களைவிட விரைந்த மாறுபாடுடையன. எனினும், இகர உகரக் குறுக்கத்தையும் தனி எழுத்தான ஆய்தத்தையும் சார்பெழுத்தாகவே கொண்டு, மகரக்குறுக்கத்தைச் சார்பெழுத்தாகக்கூடக் கொள்ளாத தொல்காப்பியம் வெறும் இணையுயிரான ஐ, ஔ இரண்டையும் முதலெழுத்தாகவே கொண்டது குறிப்பிடத்தக்கது. தொல் காப்பியர் காலத்தில் அவை தமிழுக்குஇன்றியமையா எழுத் தாகவே கொள்ளப்பட்டன என்பதில் ஐயமில்லை.

(5) தொல்காப்பியத்துக்கு முற்பட்ட காலத்திலேயே, பழந்தமிழ் அல்லது முத்தமிழ் அல்லது திராவிடம் ஐந்துக்கு மேற்பட்ட மொழிகளாகப் பிரியுமுன்பே, ஐ, ஔ, திராவிட ஒலிகளுள் தனிப்பட்ட ஒலிகளாயிருந்தன என்பதை திராவிட மொழிகளின் ஒப்புமையால் அறியலாம். திராவிட மொழி ஒப்புமை ஆராய்ச்சியாளர் இதனை இன்றும் நன்கு ஆராய்தல் பயன்தரும். இன்று திராவிடமொழி ஆராய்ச்சிக்கு அரசியல் ஆதரவு தராமலும் ஊக்கம் கெடுத்தும் வருவதால் திராவிட மொழிகளின் புலவர் கூடிக்கலக்க முடியாதிருந்து வருகிறது. ஆனால் பழந்தமிழ் ஐ, மலையாளத்தில் அ, தெலுங்கு கன்னடத் தில் எ எனத் தனிச்சிறப்புடன் மாறுதலுற்றுங் காண்கின்றது. எனவே, அது திராவிடத் தொல் முதல் ஒலி என்பதில் ஐயமில்லை.

(6) தொல் முதல் திராவிட ஐ, ஔ அல்லாமல் பல திராவிட மொழிகளிலும் புதிதாக ஐ, ஔ ஒலிகள் அகர இகர அகர உகர இணைப்பால் ஏற்படுவதும் உண்டு. தமிழில் நறு - நறை—நறவு; அம்மா—அம்மை; கடமா—கடமை; நிலா—நிலவு; சுறு—சுறவு என ஆ ஐ ஆகவும் அ வு (ஔ) ஆகவும் மாறுகின்றன. செந்தமிழிலக்கணம் ஔ இறுதியில் வராதெனக் குறித்ததால் நறவு, சுறவு ஔகாரமாகக் கணிக்கப்படவில்லை.

(7) ஐ, ஔ என்பவற்றை அய், அவ் என்று குறித்தால் அவை ஐகார ஔகாரக் குறுக்கங்கள் ஆகுமேயன்றி, இலக்கணப் புலவர் குறித்த நெடிலாக முடியாது. அ இ, அ உ எனக் குறித் தால் அது தமிழ்மரபாகாது. அயி, அவு எனக் குறித்தால் அவை நிரை அசை அல்லது இணை அசையாகும். தனி அசை அல்லது நேரசை ஆகா. இணையுயிரின் (diphthong) தன்மை அறியாதவரே ஐ, ஔ தனி ஒலிகளோ எழுத்தோ அல்ல என்பர்.

(8) இறுதி ஐ—அவு ஆகலாம் (புலை—புலவு) இவற்றுள் 'அவு' இந்துஸ்தானியில் ஆவ் ஆகிறது. (தமிழ் புலவு—இந்தி புலாவ்) தவிர, தமிழிலேயே ஐ குறுக்கமாக நில்லாதபோது ஆய் ஆகிறது. அவ—ஆவ் ஆகிறது. அழுத்தம் பெறாதவிடத்து ஐ ஔ என்பன அய், அவ் என ஒலித்து அழுத்தம்பெற்ற விடத்து ஆய், ஆவ் ஆகின்றன என்பதை ஈண்டுக் காணலாம்.

(எ - டு.) ஐ (அய்) < ஐ (ஆய்)

தந்தை, (விளி வேற்றுமை) தந்தாய்.

| | | |
|---|---|---|
| வந்தனை | (முன்னிலை ஒருமை குறுக்க வடிவு | வந்தாய் (குறுகாவடிவு) |

நட (தன்வினைப்பகுதி). நடவு, நடத்து (பிறவினைப்பகுதி—குறுக்கம்) நடாவு, நடாத்து (பிறவினைப்பகுதி—குறுகாவடிவு).

முடிவுரை :

ஐ, ஔ இரண்டும் பண்டைத் திராவிட ஒலிகள். அவற்றின் முழு ஒலிப்பு ஆய், ஆவ். குறுகிய ஒலிப்பு அய், அவ். முழுஒலிப்பு அயி, அவு என்றும் வருமாயினும் இவை ஈரசை அல்லது நிரையசை ஆயின. வடநாட்டுத் தாய்மொழியாளரும் இம்மரபு பற்றியே ஐ, ஔகாரங்களை ஆய், ஆவ் என ஒலித்தனர். இக்காலத் தமிழரும் தமிழ்நாட்டு வடமொழிப்புலவரும் தமிழர் மரபில் நின்ற வடவரும் அதனை அய், அவ் என்று ஒலித்தாலும் பண்டை வடமொழி ஒலி பண்டைத்தமிழ் மொழியொலியே என்பதை வடமொழிப் புணரியல் (சந்தி இலக்கணம்) காட்டும்.

(எ - டு.) தஸ்மை + அதாத் = தஸ்மாயதாத்.
(= அவனுக்கு) (= கொடுத்தாள்)
ததௌ + இயம் = ததாவியம்.
(= கொடுத்தாள்) (= இவள்)

தமிழின் ஐ, ஔ எழுத்தும் பிற தமிழ் எழுத்துக்கள் யாவும் நெடுங்கணக்கு வகையும் இலக்கணமும் யாவும் தமிழே: தூய திராவிடமே. இவை எதுவும் வடமொழிக்கோ, ஆரியத்துக்கோ உரியனவல்ல. ஆயினும், வடநாட்டில் பெரும்பாலான சூத்திர, தாழ்த்தப்பட்டமக்கள் எனப்படுபவர் தமிழினத்தவரே ஆதலாலும்; எழுத்துமுறை, இலக்கணம், இலக்கியம் வகுத்தவர் தமிழரும் தமிழினத்தவருமே ஆதலானும்; தமிழைப் பின்பற்றியே வடவர் நாகரிகப்பண்பு பெற்றனராதலானும், வடமொழி எழுத்து ஒலி, நெடுங்கணக்குமுறை, புணர்ச்சியிலக்கணம் ஆகியனவை பேரளவு தமிழைப் பின்பற்றின என்று காணலாம்.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

**நெல்லை அருணகிரி இசைக்கழகத் தமிழ்த் திருநாள்**

இவ்விழா ஆண்டுதோறும் நிகழும் வழக்கம்போல் இவ்வாண்டிலும் நிகழ்கின்றது. சிறப்பாக இவ்வாண்டில் திரு. மு. சுப்பிரமணியன் செட்டியார் செந்தமிழ்ப் பரிசும், பத்துப்பாட்டு மாநாடும் முறையே ஐந்தாம் நாளும், ஆறு ஏழாம் நாட்களிலும் நிகழப்பெறுகின்றன.

இவ்விழா வள்ளுவர் ககூஅந, தை உஉ - உஅ (4-10, 2-1952) முடிய ஏழு நாட்கள் தொடர்ந்து நிகழ்கின்றது. திருநெல்வேலித் தருமபுரத் திருமடத்தில் நிகழ்கின்றது. விழாத் தொடக்கத்தலைவர் திரு. தா. சு. கந்தசாமி முதலியாரவர்கள், எம். ஏ., ஆவார்கள்.

இராவ்சாகிபு பு. கு. அருணசலக் கவுண்டர் அவர்கள் எழுதிய 'மூனிசீபு - வேதநாயகம் பிள்ளை வரலாறும் நூலாராய்ச்சியும்' என்னும் நூலின் அரங்கேற்றத் தலைவர் திரு. சு. இராமசாமிக் கோனர் அவர்கள். பி.ஏ. பி.எல். சுப்பிரமணியன் செட்டியார் செந்தமிழ்ப் பரிசு விழாத் தலைவர் ஆசிரியர் சித்தாந்த கலாநிதி ஔவை. சு. துரைசாமி பிள்ளை அவர்கள்.

திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின் பத்துப் பாட்டு மாநாட்டுத் தொடக்கவிழாத் தலைவர் சித்தாந்த சைவப்புலவர், இராவ்சாகிபு, டாக்டர் திரு. தி. இரா. அண்ணமலைப் பிள்ளை அவர்கள் L.C.P.S., L.M.S.A. (Lond) ஆவார்கள். பத்துப்பாட்டு மாநாட்டு விழாத் தலைவர் சென்னை பச்சையப்பன் கல்லூரி டாக்டர் மு. வரதராசனர் அவர்கள், M.A., M.O.L., Ph.D. இவர்கள் எழுதிய "கள்ளோ காவியமோ" என்ற நாடகநூல் நெல்லை சங்கீத சபாக் கொட்டகையில் ஆசிரியர் தலைமையில் அரங்கேறப் பெறுகின்றது. தமிழ்த்திருநாள் விரிவுரைசெய் நல்லிசைப் புலவர் பெருமக்கள் பதினெழுவராவர். அவர் வழங்கும் அரும்பெரும் அமிழ்தும் பதினேழு என்ப.

பத்துப்பாட்டு மாநாட்டின் விரிவுரையாளர் பதின்மராவர். இப் பெரும் புலவர் பெருமக்களால் வழங்கும் வண்டமிழமிழ்து பத்துப்பாட் டென்க.

(க) சுப்பிரமணியன் செட்டியார் செந்தமிழ்ப் பரிசுப் போட்டியில் கலந்துள்ள உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் பதினல்வர். பொருள் 'வள்ளுவர் காட்டும் வாழ்வு.' முதற் பரிசு வெண்பொன் ஐம்பது; இரண்டாம் பரிசு முப்பது.

(உ) கல்லூரி மாணவர்கள் பதின்மர். பொருள் "இலக்கியமும் வாழ்வும்" முதற் பரிசு வெண்பொன் நூறு ; இரண்டாம் பரிசு அறுபது.

குறளிசைக் குழுஉலா, அ. இ. கழகத்தார். இசைக்கதை அரங்கு - "கண்ணிழந்தான் பெற்றுகந்தான்" மறை இசைமணி திரு. சுந்தரஓதுவா மூர்த்தி அவர்கள் வீரநல்லூர். சொற்போர், "மூவரில் முதல்வர்", உரையாடல் - "ஒரு குடும்பத்தில், "ஆடல் பாடல்" "வில்லுப் பாட்டு" பத்துப்பாட்டின்பம், உரையாடல் "பெண்கள் அன்றும் இன்றும்", நாடகம் "கள்ளோ காவியமோ" முதலியவை சிறந்த மாணவ மாணவியர் முதலியோர்களால் நிகழ்த்தப்பெறும்.

இக்கழகத்துப் பெரியார்கள் ஆற்றிவரும் அருந்தமிழ்ப் பெருந் தொண்டு ஆண்டவன் அருளால் நாட்டுக்கும் மொழிக்கும் நன்னெறிக்கும் வேண்டும் நலம் பல பயப்பதாக. நீடு வாழ்க.

**வாலாஜாபாத் இந்துமத பாடசாலை குடியரசு விழா**

26-1-1952-ல் குடிஅரசு விழா மேற்கண்ட பாடசாலையில் இனிது நடைபெற்றது. இரும்புக்கு இசைவு அளிக்கும் அலுவலர் திரு. வி. கோவிந்தன் எம். ஏ., அவர்கள் மாணவர்சூழ கொடியேற்றினர். இராம கிருட்டின மடத்தைச் சேர்ந்த திரு. சர்வக்ஞானனந்தா அவர்களும், கலைக் கல்லூரி பேராசிரியர் சையத் யாகூப் அவர்களும் தம் குடும்பத்தாருடன் விழாவில் இனிது கலந்துகொண்டனர்.

**ஆறும் ஜார்ஜ் மன்னர் மறைவு**

இம்மன்னர் இந்தியநாடு விடுதலை எய்திய உரிமைக் குடியரசாகும் வரை மன்னர் மன்னரென விளங்கினர். பின்னர் ஆங்கில நாட்டு மன்னர் என்னும் இயல்புரிமை வாய்ந்து திகழ்ந்தனர். பிரித்தானியா வின்கண் ஒப்புயர்வில்லாத் தம் அரண்மனையகத்து ஆண்டவன் நற்றுணை யொன்றே என்றும் நீங்காப் பொற்பினதென்பது போதரத் தனித்து 6-2-'52-இல் இவ்வுலக வாழ்வை நீத்தனர். இவர்க்கு அகவை ஐம்பத்தாறு. இவர்தம் பிரிவு எல்லாரையும் இன்னலங்கடலுள் ஆழ்த்துவதாயிற்று.

இவர்க்கு எலிசபத்து, மார்க்ரட்டு என்னும் இருபெரும் மகளாருளர். எலிசபத்து அம்மையாரே இளவரசியாராயிருந்தனர். இவரே இப்பொழுது இராணியாராயினர். இவர்தம் அகவை இருபத்தாறாகும். இவர்தம் கணவனர் டியூக் ஆவ் எடின்பரோ ஆவர். இவர்க்குச் சாரலஸ், ஆன் என இரு இளமகார் உளர்.

மன்னரின் ஆவி 'மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்து' இன்புறுமாக. நம் ஆழ்ந்த பரிவு அம்மையார்க்கும் பிறர்க்கும் ஆகுக.

**தீவினைச் சிறுவர்பால் பரிவு**

கிறித்துவநெறித் தலைவரும் பெருங்குரவருமாகிய போப்பாண்டவர் உலகச்சிறைகளில் வாடும் சிறுவர்பால் மிக்க பரிவுகொண்டு ஒரு நற்றுணைச் செய்தி விடுத்துள்ளார்கள். அது நீங்கள் சிறைக்கோட்டத்தில் வாடி இன்னலுற நேர்ந்த குற்றம் உங்களைப்பொறுத்தது மட்டும் அன்று. எந்த வகையாலும் ஊதியந் தேடுவதே நோக்கமாகக்கொண்டு நிகழ்த்திவரும் செய்தித்தாள்களும், நாடகங்களும், திரைப்படக் காட்சிகளும், பள்ளிக் கூடங்களும் போன்றவற்றை நடத்திவரும் நன்றியில் செல்வத்தாரே அக் குற்றத்துக்குப் பெரும் பொறுப்பாளிகள் ஆவர். இளைஞர்களை அவர்கள் வேண்டுமென்றே கெடுக்கிறார்கள் என்றுகூடச் சொல்லுதல் பொருந்தும் என்பதாகும்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

## பத்துப்பாட்டு மாநாடு
(திருநெல்வேலி) — (9, 10-2-1952)



முன்வரிசையில் இடமிருந்து வலம்—(5) தலைவர்: டாக்டர் மு. வரதராசனார்,
எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்டி.

(6) திறப்பாளர்: இராவ்சாகிப், சித்தாந்த சைவப்புலவர்,
டாக்டர், தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை, L.C.P.S., M.S.S.A. (LOND.)